# பத்ருப் போரின் பின் விளைவுகள்

கலைமாமணி
கவி கா.மு. ஷெரீப்



சீதக்காதி நூல் வெளியீட்டகம்
21, பச்சையப்பச் செட்டித் தெரு,
சென்னை - 600 002.

# நூன்முகம்

''பத்ர் போரின் பின்விளைவுகள்'' எனும் தலைப்பில் முஸ்லிம் முரசில் தொடர் ஒன்றனைத் தொடங்கினேன். எனது நோக்கம்—,

பத்ர் போருக்குப் பிந்திய வரலாற்றினை முற்றுமாக எழுதிட வேண்டும் என்பதே. பன்னிரண்டு கட்டுரைகளுடன் அத்தொடர் தொடர்ந்திடவியலாது போயிற்று. எழுதியவரை உஹதுப் போருடன் நிறைவு செய்து நூலாக்கம் செய்துள்ளேன். இதற்கு மேலுமான வரலாற்றினை எழுதி முழு நூலாக வெளியிட்டிடும் எண்ணமும் உளது. இறையருள் துணை நிற்குமாக! எனது கட்டுரைகளை அழகுற வெளியிட்டுதவிய முஸ்லிம் முரசின் ஆசிரியருக்கு நன்றி.

இந்த நூலினை பத்ர் போரின் பின்விளைவுகள்—முதற்பாகமாகக் கொள்க!

'உஹது ஷுஹதாக்களி'ன் பெயர்கள் நூலின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளன. புகழ் அனைத்தும் இறைவனுக்கே!

சென்னை
மார்ச்சு 1991

கவி காமு ஷெரீப்

இந்நூல்—,

பத்ர்—உஹத் போர்களில்
உயிர்தந்த உயரிய
தியாகச் செம்மணிகளின்
நினைவு.

—ஆசிரியன்

# ஹஜ்ரத் உமறின் முன்னிலைகள்

## புகுமுகம்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம் வாழ்க்கையை நான்கு நிலையாக வகுத்துள்ளார்கள் வரலாற்றாளர்கள்.

1. பெருமானாரின் பிறப்பிலிருந்து நபிப்பட்டம் பெறுகின்ற வரையில்.
2. நபிப்பட்டம் பெற்ற பின்னர் மதின மாநகரினுக்கு ஹிஜ்ரத் புறப்படுகின்ற வரையில்.
3. மதின மாநகர வாழ்க்கையில் ஹிஜ்ரி முதலாண்டு முற்பகுதி வரையில்.
4. அதன் பின்விளைவுகள்.

   நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உலகில் வாழ்ந்த காலம் 63 ஆண்டுகள். இவற்றுள் நபிப்பட்டம் பெறுவதற்கு முந்தைய ஆண்டுகள் 39. நபிப்பட்டம் பெற்றதிலிருந்து மக்கம மாநகரில் இறைவனின் தூதர் என்ற நிலையில் மட்டும் வாழ்ந்த காலம் 13 ஆண்டுகள். மதின மாநகரில் இறைத் தூதர் எனும் அருளாளராகவும் அரசோச்சும் ஆட்சி நெறியாளராகவும் வாழ்ந்த காலம் 11 ஆண்டுகள்.

இந்தப் பதினோரு ஆண்டுகளிலுங்கூட ஓராண்டுக் காலம் அதிக அளவில் தொல்லைகளின்றி இஸ்லாமிய

சன்மார்க்க நெறி விளக்கம் செய்த காலமாகும். இந்த ஓராண்டையும் நீக்கிவிட்டுப் பார்த்தால், பத்து ஆண்டு களில் நபியாக மட்டுமன்றி நாடாளும் வேந்தராகவும் வாழ்ந்துள்ளார்கள் நம் பெருமானார் (ஸல்) அவர்கள் என் பது தெரியும்.

அறநெறியைவிட மறநெறியே மேலெனக் கருதி வாழ்ந்த மக்கள் அரபு நாட்டு மக்கள். அடிமை வாழ்வின ராக இல்லாவிடினும் அரசோச்சியோ ஆட்சி நெறிக்குட் பட்டோ வாழ்ந்தறியா மக்கள் அம்மக்கள். கோத்திரச் சண்டை, குலச்சண்டையெனக்காலமெலாம் சண்டையிட்டு அழிவதே தொழிலெனக் கொண்டவர்கள் அந்த மக்கள்.

மது, மாது, பொய், சூது, களவு, மோசடி, ஏமாற்று, நயவஞ்சகம், வழிப்பறி, வட்டி எனும் தசமகாபாதகங் களின் மொத்த உருவமாக வாழ்ந்த அந்த மக்களை, சிறு தவறும் செய்யாத செந்நெறி வாழ்வினராக மாற்றியதும் இந்தப் பத்தாண்டுகளில்தான்.

உணவு, உடை, உரை, உணர்வு, ஓதல், தொழுகை, பணிவு, பண்பு, கனிவு, எளிய வாழ்க்கை, ஈகை வாழ்க்கை, அறவாழ்க்கை, அழிவற்ற அறிவுநெறி வாழ்க்கை—இப்படி, யாவற்றிலுமே ஒரு நெறிப்பட்டவர் ளாக ஒரு நாட்டை, நாட்டு மக்களைப் பத்தே ஆண்டிற் குள் பக்குவப்படுத்திய மாபெரும் சாதனைக்குரியவர்கள் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைத் தவிர்த்து வேறு யார் உண்டு இவ்வுலகத்தில்? இல்லை, இல்லை; இல்லவே இல்லை என்பதுதான், உண்மை பகர்கின்ற உலக வரலாற் றாளர்களின் ஒட்டுமொத்தக் கணிப்பு.

இந்த வெற்றியாளரை விவேக மிக்க அறநெறியாளரை உலகம் உற்று நோக்க ஆரம்பித்தது பத்ர் போருக்குப் பின் னர்தான். எனவே, பத்ர் போரின் பின்விளைவுகள் எனும் மகுடமிட்டு இவ்வரிய வரலாற்றினை இன்ஷா அல்லாஹ் எழுதிட முனைந்துள்ளேன்—வல்லநாயகன் துணைபுரிவா னாக.

பத்ருப் போரின் வெற்றிச் செய்தி மக்க மாநகரினை வந்தடைந்தபோது நாயகம் (ஸல்) அவர்களின் இரண்டாம் மகளாரான ருகைய்யா (ரலி) அவர்கள் வஃபாத்தாகி ஜனாஸா நல்லடக்கம் நடந்து முடிந்திருந்தது. எனவே வெற்றிக் கொண்டாட்டம் கொண்டாடி மகிழ்ந்திட முடிய வில்லை தீனவர்களால்.

ருகைய்யா (ரலி) அவர்கள் வஃபாத்தாகிடாதிருந்தால் பெரும் அளவில் விழாவாகவே அவ்வெற்றியை அவர்கள் கொண்டாடியிருப்பார்கள்; ஆடிப்பாடி ஆனந்தமுற்றிருப் பார்கள். காரணம், மரணவாதிகளுக்காக வாய்விட்டு அரற்றி அழுதிடக்கூடாதென்றும், வெற்றிக்கோ வெற் றுக்கோ ஆடிப்பாடி ஆனந்தக் களிப்பாட்டங்கள் ஆடிடக் கூடாதென்றும் இறை அறிவிப்பு (வஹீ) வந்திடாக் காலமது. ஆனால், ருகைய்யா (ரலி) அவர்களின் மரணத்தை வழங்கி மறைமுகமாகப் பெரும் அளவில் வெற்றிவிழா கொண்டாடாதவாறு தடுத்தான் இறைவன் எனக்கொள்ள இந்நிகழ்வு காரணமாய் அமைகின்றது.

மதீன மாநகரிடை வந்து சேர்ந்தார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். மகிழ்வையும் துயரையும் சமமாகக் கருதுகின்ற இயல்புடையவர்கள் அவர்கள். இருப்பினும் பத்ர் வெற்றி மனத்துள்ளாகவேனும் அவர்களை மகிழ்வுறச் செய்திருக்க வேண்டிய ஒன்றுதான். ஆனாலும் அவர்களால் அவ்வாறு மகிழ்ந்திட முடியவில்லை. முடியாமைக்குக் காரணம், மகளின் மரணம் மட்டுமல்ல, பத்ர் போரில் மாண்டு மடிந்த பகைவர்க்காகவும் இரங்கிடும் மனப்பக்குவமும் அவர் களுக்கு இருந்தது. அவ்வாறு இருந்திடும் பெற்றியை அளித்திருந்தான் இறைவன்.

ஆம்! வலிந்து போர் தொடுத்த பகைவர்கள், வன்செயலில் மட்டுமன்றி வன்மனத்தவர்களும் ஆவர். அவர்கள் நாயகம் (ஸல்) அவர்களைப் படுத்திய கொடுமைக்கு அளவேயில்லை. என்றாலும் அவர்களெல்லாம் திருந்தியிருந்தால்...? இப்படியும் எண்ணிப் பார்த்திடக்கூடிய இயல்பு நாயகம் (ஸல்) அவர்களுக்கு உண்டல்லவா!

இன்னொன்று, சிறைப்படுத்தப்பட்டு வந்திருப்போரெல்லாம் யார்? முற்றிலும் பகையினரேயானாலும் அவர்களுள் நாயகம் (ஸல்) அவர்களின் நெருங்கியு உறவினர்களும் இருந்தார்களே.

மக்க மாநகர வாழ்க்கையில் உதவி வந்த நாயகம் (ஸல்) அவர்களின் சிறிய தந்தையரான ஹலரத் அப்பாஸ் (ரலி) இருந்தார்கள். தம்மை வளர்த்து ஆளாக்கிய பெரிய தந்தையான ஆபூதாலிப் அவர்களின் மைந்தர்களுள் ஒருவரான அக்கீல் இருந்தார். இன்னொரு பெரிய தந்தையார் ஆரித் அவர்களின் மகன் நவ்பல் இருந்தார். இவர்களுக்கெல்லாம் மேலாகத் தம் மூத்த மகளார் ஜெய்னம்பு (ரலி) அவர்களின் கணவர் அபுல் ஆஸ் இருந்தார். இவர் நாயகம் (ஸல்) அவர்களின் மருகர் மட்டுமல்ல, மைத்துனி மகனுமாவார். அதாவது, கதீஜா பிராட்டியாரின் சகோதரியான ஹாலா (ரலி) அவர்களின் மகனார்.

இவ்வாறாகத் தம்உற்ற உறவினர்களெல்லாரும் சிறைப் பறவைகளொப்பப் பிடிபட்டு வந்திருப்பதைப் பார்த்த போதுமகிழவா முடியும்? ஆண்டவன் வெற்றியளிப்பதாக வாக்களித்திருந்தானேயன்றி, நீர் மகிழுமாறு வெற்றியளிக்கிறேன் என அறிவிப்புச் செய்திருக்கவில்லையே!

அவர்கள் சிந்திக்கத் தெரிந்தவர் மட்டுமன்றி மக்களைச் சிந்தித்திடத் தூண்டுமாறும் அவர்களை இறைவன் அனுப்பியிருந்தான்.

இவ்வித நிகழ்வுகள் மட்டுமன்றி இன்னொரு அதிர்ச்சிக்குரிய நிகழ்விற்குத் தீர்வு காண வேண்டிய நிலையும்

நாயகம்(ஸல்) அவர்களுக்கு இருந்தது. ஆம்? நாயகம்(ஸல்) அவர்கள் பத்ர் போர்க்களத்தில் எதிரிகளுடன் போராடிக் கொண்டிருக்கும்போது மதீனத்தில் ஒரு நிகழ்வு.

மதீன மாநகரில் அரபியர்கள் மட்டுமன்றி யூதர்களும் வாழ்ந்திருந்தார்கள் என்பது நமக்குத் தெரியும். அவர்கள் வணிகர்களாகவும் செல்வந்தர்களாகவும் நிலக்கிழார்களாகவும் திகழ்பவர்கள் என்ற வரலாறும் நாமறிந்ததே.

இவர்கள் இஸ்லாமியப் பகைவர்களாகவும் இருந்தார்கள். அப்துல்லாஹ் இப்னுஉபை என்பவனின் தலைமையிலான முனாஃபிக்குகளின் தொடர்பும் இவர்களுக்கு இருந்தது.

இவர்கள் மாடமாளிகை கூட கோபுரங்களுடன் கூடிய கோட்டைவாசியினர்; பட்டினியறியாப் பருத்த உடம்பினர். வட்டித் தொழிலினர். அரபி ஆண்களை மட்டுமன்றிப் பெண்களையுங்கூட அடகு பிடித்து அகம் மகிழ்ந்திடும் செல்வத் திமிரினர், போகிகள், போதை விரும்பிகள்.

இவர்களுள் ஒரு கூட்டத்தாரின் பெயர் பனூகைனுகாஃ என்பதாகும். இந்தக் கூட்டத்தார் வாழ்கின்ற கோட்டைக்குள் முஸ்லிம் அன்ஸாரிப் பெண் ஒருவர் பால் விற்றிடச் சென்றார். அப்பெண்ணை அவமானமடையச் செய்து மகிழ்ந்தனர் பனூகைனுகாஃ எனும் யூதக் கூட்டத்தினர். அதுபற்றிக் கேட்கச் சென்ற ஓர் அன்ஸாரி முஸ்லிமையும் கொலை செய்துவிட்டனர். இந்தப் பிரச்சினையும் நாயகம் (ஸல்) அவர்கள் முன்னரிக் காத்திருந்தது.

பத்ர் போர் வெற்றிப் போராக வரலாற்றில் வெகு சிறப்பாகப் பேசப்படுகிறது. ஆனால், அதன் பின்விளைவுகள்...?

பணி முடிந்துவிட்டதா நாயகம் (ஸல்) அவர்களுக்கு? இத்துடன் எல்லாம் முடிந்ததென இறைவனைத் துதித்துப் புகழ்ந்து போற்றி மனைவி மக்களுடன் மகிழ்ந்து பேசி மனக்களிப்புற்றிட முடிந்ததா அவர்களுக்கு?

ளிப்புற்றிருக்கப் பிறந்தவர்களல்லவே பெருமானார் (ஸல்) அவர்கள். அவ்வாறு இருக்குமாறு அவர்களைப் படைத்திடவில்லையே வல்லநாயகன். நம்மை எதற்காகப் படைத்துளான் இறைவன் என்பதை நம்முள் பலர் அறியாதிருக்கலாம். அறிந்தும் ஆசையின் காரணமாகச் செய்பணியைத் துச்சமென ஒதுக்கி, செய்யத் தகாதன வற்றைச் செய்வோராகவும் நம்முள் சிலர் இருக்கத்தானே செய்கிறோம். ஆனால், நாயகம் (ஸல்) அவர்கள் அவ்வாறானவர்கள் அல்லவே. இறைவனின் விதிப்பை, கட்டளையை இம்மியும் பிசகாது நிறைவேற்றுவோர்களாயிற்றே.

மகிழ்ச்சி, மனப்போதையில் எழுவது. இறை நம்பிக்கையை அவன் கட்டளையை அவன் விதிப்பை நிறைவேற்றிடும் பொறுப்பு எனும் அமுதத்தை மனத்துள் நிரப்பிவிட்டால்? ஞானமெனும் நல்லறிவுத் திட்பத்தை இதயத்தில் இருத்திவிட்டால்? இஸ்லாமியக் கொள்கையை—கோட்பாட்டினை மானுடர் மனத்தில் அகலாது பதித்து விட்டால்!

இத்தகு அற்புதத்தை நடத்திக்காட்ட ஆண்டவனால் அனுப்பப்பட்டிருந்த நாயகம் (ஸல்) அவர்களின் மனம், விஷத்தை ஏற்று அதை அமுதமாக மாற்றிவிடும் ஆற்றல் பெற்ற மனம். அத்தகைய ஆற்றல் பெற்ற நாயகம் (ஸல்) அவர்களின் மனத்திலே, அறியாமையால் அநியாயமாகப் போரிட்டிறந்த துரோகிகளான மக்கா வாசிகள் பற்றிய அவர்களின் மனைகள்தோறும் அழுகை மிகைத்திருக்குமே என்பது பற்றிய ஆதங்கமிருந்தது. சிறைபிடிக்கப்பட்டு வந்திருப்போரின் பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டிய சிந்திப்பிருந்தது. யூத பனூகைனுகாஃ கூட்டத்தாரின் அடாத செயல்களுக்கு முடிவு காணவேண்டிய கட்டாயக் கடமையிருந்தது. இவற்றுக்கிடையே பத்ருப் போரின் வெற்றிவீரராக மதீன மாநகரில் கடமையாற்றிடும் நினைவுடன் இருக்கிறார்கள் நாயகம் (ஸல்) அவர்கள்.

## மக்காவாசிகளின் அழுகை

இவர்கள் இஸ்லாமியச் சன்மார்க்கத்தை மனம் ஒப்பி ஏற்றிடும்வரை அழுதிடவேண்டியவர்களே. இது ஆண்டவனின் விதிப்பு.

யூதர்களின் கொடுமைக்குப் பரிகாரம் காண வேண்டியது அவசியம். ஆனால்—

அதைவிட அவசர அவசியமாகத் தீர்த்திடவேண்டியது சிறைக்கைதிகளாக உள்ள மக்காவாசிகள் பற்றியது. அவர்கள் ஒருவர் இருவரல்லர், எழுபத்து நான்கு பேர்கள். இவர்கள் ஊர்போய்ச் சேர்ந்தால் இந்த எழுபத்து நான்கு பேருடைய குடும்பத்திலேனும் தற்காலிகமாக அழுகை ஓய்ந்திடுமல்லவா!

கருணையும் உவமை கூறிட இயலா இரக்கமும் உடைய நாயகம் (ஸல்) அவர்களின் உள்ளம், சிலருடைய இல்லங்களிலேனும் அழுகை ஓயட்டுமே என எண்ணித் தானே இருக்கும்! அகிலத்திற்கே அருட்கொடையாக வந்தவர்களல்லவா அவர்கள். கட்டப்பட்டிருக்கிறார்கள் பிடிபட்டு வந்த 74 பேர்களும்.

அப்பாஸ் (ரலி) அவர்கள் உடல் பருத்தவர்கள். கட்டுகளின் இறுக்கத்தால் வருந்துகிறார்கள். சிறிய தந்தையாயிற்றே! அவர்களின் கட்டுகளைத் தளர்த்திவிடச் சொன்னால் என்ன? இரங்கும் மனமுடைய ரஸூல் (ஸல்) அவர்களின் மனம் இப்படியா சிந்திக்கும்?

தம் சிறிய தந்தையைப்போல்தாமே ஏனையோரும் வருந்துவார்கள். இப்படி எண்ணினார்களோ என்னவோ

''எல்லாருடைய கட்டுகளையும் தளர்த்திவிடுங்கள்'' என உத்தரவிடுகிறார்கள்.

வள்ளல் நாயகம் (ஸல்) அவர்களின் வாயசைந்தால் வானத்தையும் சாடிடும் ஸஹாபாக்கள் உத்தரவை நிறை வேற்றுகிறார்கள். சிறிது ஆறுதல் கைதிகளுக்கு. இச் செய்கை உறவுக்காரருக்கெனத் தனிச்சலுகை காட்டிடாத நேர்மையான நீதியான நடுநிலையாளர் நாயகம் (ஸல்) அவர்கள் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு அல்லவா!

உணவு வழங்கப்படுகிறது; உண்ணீர் வழங்கப்படு கிறது. உண்டாலும் பருகினாலும் உயிர் பிழைப்போமா? இதுதானே போர்க்கைதிகளின் உள்ளத்தில் கிளர்ந்தெழும் கேள்வியாயிருக்க முடியும்?

கேட்கிறார்கள் நாயகம் (ஸல்) அவர்கள், தங்கள் அணுக்கத்தோழர்களாகிய சித்தீக் (ரலி), அலீ (ரலி) ஆகியோரிடத்தில், ''இக்குற்றவாளிகளை என்ன செய்ய லாம்?'' என்று.

இச்சபையில் உதுமானிப்னு அப்பான் (ரலி) இருந்த தாகத் தெரியவில்லை. அவர்கள் இருந்திருக்கவும் முடியாது தானே. ஆம், ருகைய்யா (ரலி) மரணித்த தருணமல்லவா அது.

அலீ (ரலி) இளைஞர் பேசவில்லை. பெரியோர் முன்னம் பேசாதிருத்தல் நல்லதென மௌனமுற்றார்கள் போலும்.

''இந்த வன்செயலினர் அனைவரும் வாழ வேண்டி யவர்களல்லர்; மாள வேண்டியவர்களே. அலீ தம் சகோதரரான அக்கீலைக் கொல்லட்டும், நான் என் உறவினர்களைக் கொல்லுகிறேன். இந்தக் கொலைகாரர் கள் அனைவரும் இங்குள்ள முஹாஜிரீன் உறவினர்கள் தாம். அவரவரின் உறவினர்களை அவரவர்களே கொல்லட்டும்.''

இப்படிக் கூறினார்கள், நெறிபிறழா நீதி வேந்தர் உமரே பாருக் (ரலி).

நாயகம் (ஸல்) அவர்கள் சித்தீக் (ரலி) அவர்களின் வாயசைவைப் பார்த்தார்கள்.

''இவர்களெல்லாம் குற்றவாளிகளேயாயினும், நம் உறவினர்களே. ஆதலால், கொல்வதைவிட ஈட்டுத் தொகை பெற்றுக்கொண்டு ஏகுங்கள் ஊருக்கென அனுப்பி விடலாம். இது என் கருத்து. இதற்குமேல் நாயகம் (ஸல்) அவர்களே உங்கள் விருப்பம்.''

இது சித்தீக் (ரலி) அவர்களின் செவ்விய உரை.

''நாயகம் (ஸல்) அவர்கள்மீது வசை பாடுவதையே தொழிலாகக் கொண்டிருந்தானே ஸுஹைல் இப்னு அமீர், அவனையுமா?''

இப்படி ஒரு குரல் ஒலித்தது. ஒலித்த குரல் வேறு யாருடையதுமல்ல; உமரேபாருக் (ரலி) அவர்களே அவ்வாறு உரைத்தார்கள்.

''என்னை மன்னித்துவிடுங்கள். இனி அவ்வாறு செய்ய மாட்டேன்.'' பாவம், வறுமைப்பட்ட கவிஞர். மனைவி மக்களைக் காப்பாற்றிடப் பொருள் பெறவேண்டி வசைபாடியிருக்கிறார் என எண்ணியிருப்பார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். எனவே, கவிஞர் மன்னிக்கப்பட்டார். 'அவனுடைய பற்களையேனும் கழற்ற வேண்டாமா?' என்றெழுந்த பாருக் (ரலி) அவர்களின் கூற்றை நாயகம் (ஸல்) அவர்கள் ஏற்கவில்லை.

''ஒருவரை அங்கஹீனப்படுத்த நான் அனுமதித்தால், நாளை மறுமையில் என்னுடைய அங்கங்களைச் சிதைத்திடுவான் வல்லநாயன். எனவே, போகட்டும் கவிஞர், விட்டு விடுங்கள்'' என்றார்கள் பெருமானார் (ஸல்) அவர்கள்.

சென்றவர் திருந்திடவில்லை, மீண்டும் வசைபாடினார், அது அவர் பண்பு.

கவிஞர்கள் வசை பாடலாமா? பாடினால்? இவருக்கு நேர்ந்த பின்விளைவு இக்கேள்விக்குப் பதிலாக அமைகின்றது. வல்ஹம்துலில்லாஹ்!

மக்க மாநகரில் கஅபாவில் தொழுது ஸஜ்தா செய்து கொண்டிருந்த நாயகம் (ஸல்) அவர்களின் பிடரியின்மீது செத்த ஒட்டகத்தின் குடலை வைத்துக் கொடுமைப் படுத்தினானே அக்பத்துப்னு அபீ முயீக், அவனும் பிடிபட்டிருந்தான். இன்னொருவன் அன்னழ்ருப்னுல் ஆரித் அப்தரி. இவன் கஅபாவில் அமர்ந்து திருக்குர் ஆன் ஓதுவதைத் தடுத்தவன்; ''திருக்குர் ஆன் அபத்தக்களஞ்சியம்; இது ஒரு வேதமா?' என இகழ்ந்தவன். இவ்விருவரும் நாயகம் (ஸல்) அவர்களின் விரோதிகள் என்பதை விட, ஆண்டவனின் விரோதிகளே. எனவே இவ்விருவருக்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டது.

எஞ்சிய எழுபத்து இருவரும் தலா 4000 திர்ஹம் ஈட்டுத் தொகை செலுத்தி மீட்டேகலாம் என நிர்ணயிக்கப் பட்டது. தமக்காகவு ' தம் இரு சகோதரர் மக்களான அக்கீலுக்கும் நவ்பலுக்குமாக ஈட்டுத் தொகையை வழங்கிய பின்னர் ஊருக்கேகினார்கள் அப்பாஸ் (ரலி) அவர்கள்.

'அப்பாஸ் எங்கள் உறவினர். அவரிடம் ஈட்டுத் தொகை பெறுவதை நாங்கள் விரும்பவில்லை' என்றார்கள் அன்சாரி ஸஹாபாக்களுள் சிலர்,

''இவர் உங்களுக்கு உறவினர், எனக்கோ சிறிய தந்தை. கைதிகளில் ஏற்றத்தாழ்வில்லை'' என இயம்பி, பரிந்துரை பகர்ந்தோரைச் சமாதானப்படுத்தி, ஈட்டுத்தொகை வாங்குவது சரியானதே என ஒப்புக்கொள்ள வைத்தார்கள் பெருமானார் (ஸல்) அவர்கள்.

கணவரை மீட்பதற்கென ஜெய்னம்பு (ரலி) அவர்கள் தம் கழுத்தணி ஒன்றை அனுப்பியிருந்தார்கள். அது கதீஜா பிராட்டியார் தம் மகளுக்கு அளித்திருந்த அன்பளிப்பு. அக்கழுத்தணியைக் கண்ட நாயகம் (ஸல்)

அவர்களின் கண்கள் கலங்கின. பார்த்திருந்த நபித்தோழர்கள் மனம் பதறினார்கள். ஈட்டுத்தொகை பெற்றிடாமல் அபுல் ஆஸ் (ரலி) அவர்களை அனுப்பிட வேண்டுமென நாயகம் (ஸல்) அவர்களிடம் பரிந்துரை பகர்ந்து வேண்டி நின்றார்கள்.

தோழர்களின் வேண்டுகோள் ஏற்றுக்கொள்ளப் பட்டது. அபுல் ஆஸ் (ரலி) விடுதலை பெற்றேகினார்.

பிடிப்பட்டோருள் ஏழைகளுமிருந்தனர். அவர்களின் நிலையறிந்த நாயகம் (ஸல்) அவர்கள், ஈட்டுத்தொகை பெற்றிடாமலேயே அவர்களை விடுவித்தனுப்பினார்கள்.

கைதிகளுள் கற்றோர் சிலரும் இருந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் 10 பிள்ளைகளுக்கு எழுதப்படிக்கக் கற்றுக் கொடுத்து விடுதலை பெற்றேகிட அனுமதிக்கப் பட்டனர்.

கல்வி போதித்திடுங்காலை அவர்களுக்கு உணவும் உறைவிடமும் நல்ல முறையில் வழங்கிடவேண்டும் எனவும் உத்தரவிட்டார்கள். அவ்வாறாகவே அளிக்கப் பட்டது. பிள்ளைகளுக்குக் கல்வி போதித்து மகிழ்வுடன் விடுதலை பெற்றேகினார்கள், கைதிக் கல்விமான்கள்.

இஸ்லாம் கல்வியின் அவசியத்தை எவ்வாறு மதிக்கின்றது என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

இந்த நிகழ்வுகளுக்கிடையே ரமலான் மாதம் முடிந்தது. நோன்பு நோற்றோருக்கு ஃபித்ரா வழங்குதல் கடமையெனும் இறைவசனம் இறங்கிற்று. ஃபித்ர் தொழுகையும் வாஜிபென அறிவித்தான் வல்ல இறைவன். முப்பது நோன்பு நோற்று முடிந்த மறுநாள் ஷவ்வால் பிறை ஒன்றில் ஃபித்ரா வழங்கிப் பெருநாள் கொண்டாடினார்கள், மதீன மாநகர முஸ்லிம்கள். இந்த அறிவிப்பு அன்றைய நிலையில் பத்ருப்போரின் வெற்றி விழா போன்றே இருந்திருக்கும். ஆனால், இவ்வுலகுள்ளவரை

தினவர்க்கு ஃபித்ராவும் ஃபித்ர் வாஜிபுத்தொழுகையும் கடமையாக்கப்பட்டிருக்கின்றன.

நோன்பு, பத்ருப்போர் நடந்த ஹிஜ்ரீ இரண்டாம் ஆண்டில்தான் கடமையாக்கப்பட்டது. நோன்பு 17இல் பத்ருப்போர் நடந்ததால் முதல் நோன்பாளிகள், பத்ரு ஸஹாபாக்களே எனும் பெருமையும் அவர்களுக்கு உண்டு.

மக்க மாநகரில் விடுதலை பெற்றுச் சென்றவர்களின் குடும்பங்களில் அழுகை ஓய்ந்தது. ஓய்ந்திட உதவினார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். இப்போது அவர்கள் முன்பிருந்த பிரச்னை யூதக் கூட்டத்தாருள் ஒரு கூட்டத்தாரான பனூா கைனுகாஃ எனும் கூட்டத்தாரின் அடாத செயலுக்கு முடிவு காணவேண்டியதாயிருந்தது.

பத்ருப் போரில் பிடிபட்டிருந்தவர்கள் ஈட்டுத் தொகை வழங்கி விடுதலையாகி விடைபெற்றுக்கொண்டிருந்தார்கள். அவர்களுள் ஒருவராக விடுதலையான அப்பாஸ் (ரலி) அவர்கள் தீனூல் இஸ்லாத்தை மனப்பூர்வமாக ஏற்று ஈமானை இதயத்திருத்தியவர்களாகவே சென்றார்கள்.

ஈட்டுத் தொகை வழங்கி விடுதலையானவர்களுள் பலருக்கும் தாங்கள் இஸ்லாத்தை ஏற்கவேண்டும் என்ற எண்ணம் இருந்தபோதிலும் அதைச் செயல் வடிவில் பரிபூரணப்படுத்தும் பாக்கியம் அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு மட்டுமே கிட்டியது. அது அல்லாஹ், அவர்களுக்கு வழங்கிய நற்பேறேயாகும். மக்கத்திலுள்ளவர்களுக்கு இந்நிகழ்வு தெரியாது. தீனுல் இஸ்லாத்தின் தூய சேவையாளராக—உதவியாளராக அப்பாஸ் (ரலி) அவர்கள் விளங்கவேண்டும் என அல்லாஹ் நாடியிருந்தான். அந்த நாட்டத்தை முழுமையாக்கி இறைவன் முன்கூட்டியே அப்பாஸ் (ரலி) அவர்களை தீனுல் இஸ்லாத்துக்காகத் தந்தான் எனக் கொள்ளினும் தகும். இதனை உஹதுப்போர் நிகழ்வில் காணவியலும்.

இதன்பின் நடந்ததே பனூகைனுகாஃ எனும் யூதப் பிரிவினர்மீது மேற்கொண்ட வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்வாகும்.

மதீன மாநகரினையொட்டி மூன்று யூதக் குடியிருப்புகள் உள்ளன. இவற்றை குடியிருப்புகள் என்றிடாமல் யூதர்களின் கோட்டைகள் என்றே பகர்வர். அந்த அள

வுக்கு வலுப்பமானதாக விளங்கின அந்த யூதக் குடியிருப்புகள். இவற்றுள் ஒன்றே 'பனூகைனூகாஃ' பிரிவினரின் குடியிருப்பு—கோட்டை!

இந்த பனூகைனூகாஃ கோட்டையில் வாழ்ந்த ஆண்கள் மொத்தம் எழுநூறு பேர்கள். இவர்களுள் மூந்நூறு பேர் உருக்குச் சட்டையணிந்த போர் மறவர்களாகத் திகழ்ந்தார்கள். இந்தக் கூட்டத்தாருக்கெனக் கோட்டை இருப்பதைப் போன்று அவர்களுக்கெனத் தனியாக கடை வீதியும் இருந்தது. இவர்களின் தொழில் வட்டியும், வணிகமும். பண பலமும் உடல் வலுவும் உள்ளத்து ஆணவமும் உடையவர்களாக விளங்கிய இந்த பனூகைனூகாஃ கூட்டத்தாரிடம் மதீனத்தின் விவசாயிகளான அரபியர்கள் அடங்கி வாழவேண்டிய நிலையிலேயே விளங்கினர். அதே சமயம் இவர்களுக்கு உதவி வாழும் அரபிக் கோத்திரமும் இருந்தது. அக்கோத்திரம் கஜ்ரஜ் கோத்திரம் என அழைக்கப்பட்டது. இந்த கஜ்ரஜ் கோத்திரத்தின் தலைவன் இல்லாத்திலாகியும் முனாஃபிக்-நயவஞ்சகன் ஆக விளங்கிய அப்துல்லாஹ் இப்னு உபை ஸலூர் ஆவான்.

பனூகைனூகாஃ கோத்திரத்தார்க்கு அப்துல்லாஹ் இப்னு உபையின் ஆதரவிருந்தால் மற்ற இரு பிரிவினரான யூதக் கோட்டையினருக்கு பனூகைனூகா கோத்திரத்தின் மீது வெறுப்பு மிகைத்திருந்தது. எனினும், மதீனத்து கஜ்ரஜ் கோத்திர அரபிகளின் உதவியும் உறவும் இருந்ததால் பனூகைனூகாவினர் துணிவும் தெம்பும் மிக்கவர்களாகவே காணப்பட்டனர்.

பனூகைனூகாஃ கோத்திரத்தாரின் இந்தத் துணிவும் தெம்பும் எந்த அளவுக்குக் கீழ்த்தரமானவையாக அமைந்தன என்பதற்கு எடுத்துக்காட்டாகப் பின்வரும் இந் நிகழ்வைக் குறிப்பிடலாம்.

பனூகைனூகாஃவினரின் கடைவீதியில் பால் விற்பதற்காகச் சென்றாள் அன்சாரி முஸ்லிம் பெண் ஒருத்தி. அவள் பணிவும் நாணமும் கலந்த பயபக்தி மிக்க ஒழுக்கமுள்ள பெண்ணாக விளங்கினாள். அவள் வருவதைக் கண்ட பனூகைனூகாஃவினர் அவளுடைய முகத்திரையை விலக்க முற்பட்டனர். அந்நிய ஆடவர் மத்தியில் தன் அழகு வெளிப்படுவதை விரும்பாத அப்பெண், தன் முகத்தை மறைத்திருந்த துணியை விலக்க எண்ணிய அந்த பனூகைனூகாஃவினரின் செயலை வெறுத்ததோடு முகத் துணியை விலக்கவும் மறுத்தாள்.

இவ்வாறு முக எழில் காட்டாது அடங்கி ஒடுங்கி நடந்துபோன அந்த அன்சாரிப் பெண்ணைப் பின் தொடர்ந்து சென்று, அவளின் பின்பக்க ஆடையை இடுப்புக்கும் முட்டுக்கும் இடைப்பட்ட பாகத்தில் கத்தரித்து வெட்டி எடுத்து, அந்தப் பெண்ணை அவமானப்படுத்தினார்கள், பனூகைனூகாவினர். ஓர் அன்சாரி முஸ்லிம் பெண்ணை இவ்வாறு அவமானப்படுத்தி அகம் மகிழ்ந்த கீழ்த்தரமான செயலுக்கு அவர்களை ஆட்படுத்தியது, அவர்களின் ஆணவமும் அகங்காரச் செருக்குமே என்பதில் எவ்விதச் சந்தேகமுமில்லை.

இவ்வாறு அன்சாரி முஸ்லிம் பெண்ணொருத்தி ஆடை விலக்கப்பட்டு அவமானமும் ஏளனமும் செய்யப்பட்ட வன் செயலை அறிந்த முஸ்லிம் இளைஞர் ஒருவர் நியாயம் கேட்கச் சென்றபோது அநியாயமாக கொல்லப்பட்டார்.

நாயகம் (ஸல்) அவர்கள் மதீன மாநகரேகி நிலையாக அங்கு தங்கிவிட்டபின் யூதர்களோடு அவர்கள் ஓர் ஒப்பந்தம் செய்திருந்தார்கள். அந்த ஒப்பந்த அடிப்படையை மீறி ஒரு பெண் அவமானப்படுத்தப்பட்டதுபற்றி விளக்கம் தரவேண்டும் என நாயகம் (ஸல்) அவர்கள் பனூகை

னூரகாஃ கோத்திரத் தலைவர்களுக்கு அழைப்பு விடுத்தார்கள். பெருமானாரின் அழைப்பிக்கு அவர்கள் செவிசாய்க்கவில்லை. அதனால் பனூகைனூகாஃவினர் எவரும் விளக்கமளிக்க வருகை தரவுமில்லை.

பெண் என்பவள் புனிதமாகப் பாதுகாக்கத் தக்கவள். எந்தச் சூழலிலும் எந்தக் காரணத்துக்காகவும் பெண்களின் ஒழுக்கமும் கற்பும் உயரிய பண்பும் சிதைக்கப்பட அனுமதிக்கக்கூடாது என்ற உயர்ந்த நோக்கும் சிறந்த பண்பும் கொண்ட அண்ணல் நம் பெருமானார் (ஸல்) அவர்கள். ஏதோ ஒரு பெண்தானே அவமானப்படுத்தப்பட்டாள், எனவே, விட்டுவிடுவோம் என்று எண்ணிவிடவில்லை. ஒரு பெண்ணுக்கு இழைக்கப்பட்ட அவமானம் ஒட்டுமொத்தப் பெண்ணினத்திற்கும் இழைக்கப்பட்ட அவமானமே எனக் கருதி, அதற்குப் பரிகாரம் கண்டே தீருவதென்ற காருண்ய எண்ணத்தோடு, தங்களின் பிரிய தோழர்களுள் சிலரையும் அழைத்துக்கொண்டு பனூகைனூகாஃவினரான அந்த யூதர்களிடம் சென்றார்கள். அன்சாரி முஸ்லிம் பெண்ணை அவமானப்படுத்திய அடாவடிச் செயல்பற்றி வள்ளல் நம் பெருமானார் (ஸல்) அவர்கள் விளக்கம் கேட்டார்கள். விளக்கம் தர மறுத்தார்கள் அந்தக் கொடுமதி படைத்த யூதர்கள்.

அப்போது அந்த யூதர்களுக்கு பத்ருப் போரினை நினைவூட்டி, ''அந்தநிலை உங்களுக்கும் நேரவேண்டாம்'' எனப் பகர்ந்தார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். இவ்வாறு அண்ணல் நபி உரைத்ததும் அந்த யூதர்கள் தங்களின் ஆணவத்தையும் அகம்பாவத்தையும் ஒன்றுதிரட்டி செருக்கோடு சொன்னார்கள்:

''முஹம்மதே! எங்களையும் நீர் அரபியர்கள் என்று எண்ணிக்கொள்ள வேண்டாம். நாங்கள் அரபியரல்லர்; யூதர்கள். நாங்கள் வீரம் மிக்கவர்கள். முறையான போர்ப் பயிற்சி பெற்றவர்கள். எனவே, நாங்களும் மக்காவாசிகளைப் போலாகி விடுவோம் என்று கருதி விடவேண்டாம்.

எங்களோடு போர் செய்து பாரும் அப்போது தெரியும் நாங்கள் யாரென்று.''

பனூகைனூகாஃ கோத்திரத் தலைவர்களின் இந்த ஆணவச் சொல் கேட்டு எள்ளளவும் தயங்கிவிடவில்லை நம் பெருமானார் (ஸல்) அவர்கள். இறைவன்மீது அவர்களுக்கிருந்த பற்றுறுதியும் நியாயங்களின்பால் அவர்கள் கொண்டிருந்த மன உறுதியும் அந்த அநியாயக்கார யூதர்களின் மிரட்டலை முறித்துப் போட்டுவிட்டது. ஆம்! தங்களோடு வந்த சிறிய எண்ணிக்கையிலான தம் தோழர்களுடன் பனூகைனூகாஃ கோட்டையை முற்றுகையிட்டார்கள் நாயகம் (ஸல்) அவர்கள்.

எண்ணிக்கையில் அவர்கள் குறைவாயிருந்தாலும் எண்ணத்தால் அவர்கள் நிறைவானவர்களாயிருந்தமையால் இறை நம்பிக்கையுடனான அந்த எண்ணத்தின் வலுவை ஆணவம் மிக்க யூதர்களால் வெற்றி கொள்ள இயலவில்லை.

தங்களின் அத்யந்த நண்பரான அப்துல்லாஹ் இப்னு உபை எப்படியும் தங்களுக்கு உதவிபுரிய வருவார் என பனூகைனூகாஃ கோத்திரத்தார் எண்ணினார்கள். அந்த எண்ணமும் ஈடேறவில்லை.

சிறு எண்ணிக்கையுள்ள சிலரோடு பெரும் எண்ணிக்கையிலான தங்கள் கோட்டையை இந்த முஹம்மதால் எப்படிப் பணிய வைத்திட முடியும் என்று அலட்சியமாக எண்ணிய யூதர்களின் மனக்கோட்டை பெருமானாரின் அந்த மிகச் சாதாரண வெறும் முற்றுகையிலேயே தவிடு பொடியாயிற்று. அந்த முற்றுகை பதினைந்து நாட்கள் நீடித்தது. வேறு வழியின்றிப் பெருமானார் (ஸல்) அவர்

களிடம் முற்றிலுயாகச் சரணடைந்தார்கள், பனூகை னூகாஃ கோத்திரத்தார்.

யூதர்களின் தௌராத் வேதச் சட்டப்படி சரணடைந்த எதிரிகளில் போர்த்திறன் கொண்டவர்கள் கொல்லப்பட வேண்டும். இதர ஆண்கள் பெண்கள் உட்பட அனைவரும் அடிமைகளாக்கப்பட வேண்டும். இவ்வாறு செய்திட வகை யிருந்தும் கருணையே வடிவான நாயகம் (ஸல்) அவர்கள் அது போன்ற எந்த நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வில்லை.

சரணடைந்த பனூகைனூகாஃ கோத்திரத்தாரின் வெற்று வீடுகளையும் நிலங்களையும் தவிர்த்து ஏனைய உடைமைகளுடனும் ஆடுமாடு, குதிரை, ஒட்டகம் போன்ற வற்றுடனும் மதீன மாநகரினைவிட்டு அவர்கள் நிலம் பெயர்ந்து சென்றிடல் வேண்டும் என்ற அளவில் அவர் களை மன்னித்து விட்டுவிட்டார்கள் பெருமானார் (ஸல்) அவர்கள்.

அவ்வாறே தாங்கள் மதீன மாநகரை விட்டு நிலம் பெயர்ந்து சென்றுவிடுவதாகவும் அதற்குத் தங்களுக்கு மூன்று நாட்கள் அவகாசம் அளித்துதவ வேண்டும் எனவும் யூதர்கள் கேட்டுக்கொண்டார்கள். அவர்களின் கோரிக்கை ஏற்கப்பட்டது. அந்த மூன்று நாள் அவகாசத்துக்குள் அவர் களை வெளியேற்றும் பொறுப்பு அப்துல்லாஹ் இப்னு உபையிடம் ஒப்படைக்கப்பட்டது. அதன் பின்னரே பனூ கைனூகாஃ எனும் யூதர்களின் கோட்டையை விட்டுத் திரும்பினார், காருண்ய நபிநாதர் அவர்கள்

மதீன மாநகரிலிருந்து முற்றிலுமாக நிலம் பெயர்ந்த பனூகைனூகாஃ கோத்திர யூதர்கள் சிரியாவில் குடியேறி னர். அதுபோது இறைவன் திருக்குர்ஆனின் பகுதி 3, அத்தியாயம் 3, வசனம் 28ஐ இறக்கியருளினான்.

''மூமின்கள் மூமின்களையன்றி இறைநெறி பிறழ்ந்தவர்களைத் தம் உறுதுணைவர்களாக எடுத்துக்கொள்ள வேண்டாம். அவர்களிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அன்றி உங்களுள் எவரேனும் அப்படிச் செய்தால் அவருக்கு அல்லாஹ்விடத்தில் எவ்விஷயத்திலும் சம்பந்தம் இல்லை. இன்னும் அல்லாஹ் தன்னை நினைவு கூருமாறு உங்களை எச்சரிக்கின்றான். மேலும் அல்லாஹ்விடமே நீங்கள் மீளவேண்டியதிருக்கிறது.''

இவ்வசனம் இறங்கிய பின்னரும் எஞ்சியிருந்த யூதப் பிரிவினர் திருந்தினார்களா என்றால், இல்லை. இது வரலாறு.

4

## பத்ருப் போர் நிகழக் காரணம்

பெருமானார் (ஸல்) அவர்களும் அவர்களைச் சார்ந்த மக்க மாநகரத்தின் முஸ்லிம் ஆண்கள் அனைவரும் மதீன மாநகரினுக்குச் சென்றுவிட்டது மக்காவாசிகட்கு—குறிப்பாகக் குறைஷித் தலைவர்கட்கு—பெருத்த ஏமாற்றத்தையும் கோபத்தையும் உண்டாக்கிற்று.

ஒரு தினம், அவர்கட்கே உரிய பொதுச் சபையான 'தாருன் நத்வா'வில் கூடி ஆலோசித்தனர். பெரும் படையெடுப்பு நடத்தி அவர்கள் அனைவரையும் கொன்றொழித்திட வேண்டியதுதான் என முடிவாயிற்று. இவ்வாறு செய்வதில் அவர்கட்கு இரண்டு வித ஆதாயம் இருந்தது. ஒன்று, எதிரிகளாகிய முஸ்லிம்களையும் அவர்கள் தம் மார்க்கத்தையும் அடியுடன் அழித்தொழித்தல். மற்றொன்று அவர்கள் மக்க மாநகரில் விட்டுச் சென்றுள்ள நில புலம், வீடுவாசல், சொத்துசுகம், மனைவி மக்கள் மற்றுமுள்ள உடைமைகள் யாவும் தங்கட்கே உரித்தாகிவிடும் என்ற நினைப்பு. இதற்குமப்பால் குறைஷிக் குலத்தவரின் வீரத்தையும் சிறப்பையும் புகழையும் நிலைநாட்டி விட்டோம் என்பதால் எழுகின்ற புகழ்!... ஆனால், இம் மாபெரும் சாதனையை நிறைவேற்றிட குறைஷி குலத்தினர் மட்டுமோ மக்கத்தவர் அடங்கலுமோ சேர்ந்தாலும் போதாது. எனவே அக்கம்பக்கத்திலுள்ள கிராம மக்களையும் அணிதிரளச் செய்யவேண்டும். இதற்குப் பணம் வேண்டும். பெருமளவில் பணமிருந்தால் படைக்கான ஆட்களைத் திரட்டுவதோடு போரில் உபயோகித்திட ஆயுதங்கள், ஏறு வாகனங்கள், உணவுப் பண்டங்கள் அனைத்தையும் தேவைக்கு மேலாகவே சேர்த்துவிடலாம். ஆனால் பணம்?...

பணம் திரட்ட ஒரு திட்டம் வகுக்கப்பட்டது. அதாவது, குறைஷிக் குலத்தவர் அனைவரும் தங்களால் சாத்தியமான அளவிற்கு முதலீடு எனும் பெயரில் பொருளீவது. அதைக்கொண்டு ஷாம் தேசச் சந்தையில் விலை போகக்கூடிய பண்டங்களைக் கொள்முதல் செய்வது. அப்பண்டங்களை விற்று வருமாறு அபூசுப்யானுப்னு ஹர்ப் தலைமையில் ஒரு கூட்டத்தை ஷாம் தேசத்திற்கு அனுப்பி வைப்பது. அவர் சென்று விற்பனை செய்து கொணரும் பணத்தில் முதலீட்டை மட்டும் உரியவர்கட்கு வழங்கிவிட்டு, நிகர இலாபப் பொருள் முற்றுமாக மதீனப் போருக்குச் செலவிடுவது.

இந்த முடிவு சபையினரால் முழுமனத்துடன் ஏற்கப்பட்டது. அதன்படி முதலீட்டுத் தொகையும் பெருமளவில் திரட்டப்பட்டது. அத்தொகையைக்கொண்டு விலைப் பண்டங்களும் வாங்கிக் குவிக்கப்பட்டன. குறிப்பிட்ட ஒரு தினத்தில் மாடு, ஒட்டகம் போன்றவற்றின்மீது பண்டங்கள் நிறைந்த மூட்டைகள் ஏற்றப்பட்டன. அவற்றுடன் அபூசுப்யான் தலைமையில் நாற்பது பேர்கள் அடங்கிய கூட்டம் ஷாம் தேசத்தை நோக்கிப் புறப்பட்டது. சென்றவிடத்தில் வியாபாரம் சிறப்பாக நடந்தேறியது. இலாபமும் பெருமளவில் கிட்டிற்று. சென்ற கூட்டம் மகிழ்வுடன் மக்கமாநகரினை நோக்கித் திரும்பிடலாயிற்று. இந்த விவரங்கள் முற்றிலுமாக ஒற்றர்கள்மூலம் நாயகம் (ஸல்) அவர்கள் அறியலானார்கள், வணிகக் கூட்டம் பத்ரு எனும் இடத்தையடுத்து வந்துகொண்டிருப்பதையும் கேள்வியுற்றார்கள்.

தம்மையும் தம் தோழர்களையும் தங்களின் சொந்த ஊரான மக்கத்திலும் இருந்திட அனுமதித்திடவில்லை. மனைவி, மக்கள், நிலபுலம், சொத்துசுகங்களையும் இழந்து வெற்றவராக தீன் நெறியாளராக முழு இறை நம்பிக்கையுடன் கிட்டத்தட்ட முந்நூறு மைல்களைக் கடந்து வந்த பின்னரும் விடுவதாயில்லை; கொன்றொழித்திடப் படை

திரட்டுகிறார்கள். அதற்காகப் பணமும் திரட்டியுள்ளார்கள். இந்தப் பணம், பொருள் மக்கா சென்று சேர்ந்தால்? சிந்தித்தார்கள் நாயகம் (ஸல்) அவர்கள்.

அபூசுப்யான் தலைமையிலான வணிகக் கூட்டம் கொண்டுசெல்கின்ற செல்வம் முற்றிலுமாகத் தடுத்து நிறுத்தப்படாவிட்டால் குறைஷியரின் படையெடுப்பை நிச்சயம் சந்திக்கவேண்டிவரும். எனவே அவற்றை மக்கமா நகரினிடை சென்று சேர்ந்திடாமல் தடுப்பதே சரி என முடிவு செய்தார்கள். தம்மிடம் ஆள்பலம் இல்லை; ஆயுத பலமில்லை; ஏறுவாகனங்கள் என்பதுமில்லை. ஆனால் இறை நம்பிக்கை எனும் பேராயுதம் இருக்கிறது என்கின்ற அகலாத அழுத்தமான நம்பிக்கையுடன் முந்நூற்றுப் பதின்மூன்று பேர்களுடன் பத்ரு எனும் இடம் நோக்கிப் புறப்பட்டார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். உணவுப்பண்டங்கள்கூட அதிகம் இல்லை. அது அவர்கட்குத் தேவையுமில்லை. காரணம், அது ரமலான் மாதம் நோன்பு நோற்றிடும் திங்கள்.

நாயகம் (ஸல்) அவர்கள் வருகிறார்கள் என்றவுடன் அபூசுப்யான் அச்சம் கொண்டார். பொருள் பறிபோய் விடுமே எனப் பதற்றமுற்றார். உதவிக்குப் படை வீரர்களை உடனடியாக அனுப்பிடுமாறு மக்க மாநகரினுக்குச் செய்தி அனுப்பினார். தாவியோடும் புரவியின்மீது மிக வேகமாகப் பாய்ந்தோடிய ஒருவன் அபூசுப்யான் அனுப்பிய லிகிதத்தை மக்க மாநகரக் குறைஷியர் தலைவரின்பால் சேர்த்தான். வாசகத்தைப் படித்த குறைஷித் தலைவர்கள் அவசர அவசரமாக ஆயிரம் பேர் முழு ஆயுதபாணிகளாக ஒட்டகைகள்மீதும் குதிரைகளின்மீதும் ஏறி ஆரோகணித்துப் படை நடத்தி வந்தார்கள், பத்ரு எனும் இடம் நோக்கி.

இந்த ஏற்பாடும் நாயகம் (ஸல்) அவர்களுக்கு எட்டிற்று. இறைவனிடம் வேண்டினார்கள்.

''இரண்டு அணிகளில் ஓரணியின்மீது உமக்கு வெற்றியை அருளினோம்'' என இறை அறிவிப்பு கிட்டிற்று.

உடனே தங்கள் தோழர்களுடன் கலந்து ஆலோசித்தார்கள். சித்தீக் (ரலி), பாரூக் (ரலி) போன்ற அணுக்கத் தோழர்களின் கருத்துக்களுங்கூட அபூசுப்யான் அணியை எதிர்த்து மூலதனப் பலத்தைக் குறைத்திட வேண்டும் என்பதாகவே இருந்தது.

நாயகம் (ஸல்) அவர்களின் எண்ணமோ வேறுவிதமாயிருந்தது. 'வல்லநாயகன் இரண்டணியில் ஓரணியின் மீது உமக்கு வெற்றியை நல்கினோம் என அறிவித்திருக்கும் போது சிறுபடையுடன் பொருதுவானேன்? மகாமகா மகுடங்களாகிய குறைஷித் தலைவர்கள் நடத்தி வருகின்ற ஆயிரம் பேர்கள் அடங்கிய படையை எதிர்த்தால் என்ன அவ்வாறு எதிர்ப்பதே சரி! ஆண்டவனின் அருள் துணை இருக்கும்போது அச்சமெதற்கு?' என எண்ணினார்கள் நாயகம் (ஸல்) அவர்கள்.

தங்களது எண்ணத்தை தங்கள் தோழர்களிடம் இயம்பினார்கள். ''இறைதூதரின் ஏவல் எதுவோ அதுவே தங்களின் செயல் பணி! எழுவோம் ஆயிரவரை எதிர்த்து'' என ஏக காலத்தில் உரத்த குரலில் ஓங்கி ஒலியெழுப்பித் தங்களின் எழுச்சிமிகும் ஒப்புதலை வெளியிட்டார்கள். முந்நூற்றுப்பதின்மூன்று சகதோழர்களுடன் வருகிறார்கள்

நாயகம் (ஸல்) அவர்கள் என அறிந்ததும் ரகசியமாகக் காட்டுவழி புகுந்து மக்க மாநகரம் சென்று சேர்ந்துவிட்டார் அபூசுப்யான்.

''நான் நலமாக வந்துவிட்டேன் திரும்பி வாருங்கள்'' என அபூசுப்யான் அனுப்பிய செய்தியை அறிந்த குறைஷித் தலைவர்கள் திரும்பிவிடவே எண்ணினார்கள். பணத்தைக் கொண்டு படை திரட்டி, பெருமளவிலான போர் நடத்தி நபியையும் இஸ்லாத்தையும் ஒருசேர அழித்துவிடலாம் என்பது அவர்களின் கருத்து. ஆனால், தான் கொண்டதே

சரி எனச் சாதித்திடும் குணமுடைய ஆணவக்காரன் அபூஜஹில் கேட்டானில்லை.

''ஆயிரம் ஆற்றல் மிக்க வீரர்களிருக்கிறோம். முஹம்மதுடைய சிறு கூட்டத்தை வெல்வதா ஆகாத காரியம்? அச்சமேன்? வாருங்கள் என்னுடன்'' என அனைவரும் பின்தொடர வந்து சேர்ந்தான் அபூஜஹில், பதுருக்கு.

ஆயுதம் தாங்கிய அரும்பெரும் தலைவர்களை, ஆற்றல் மிகு வீரர்களை, சாதாரண மனிதர்களாகிய 313 பேர் எதிர்த்துப் போரிட்டு, உரலிலிட்ட நெல்லை உலக்கையால் குத்தி, அவலாக்கிக் காட்டுவதுபோல் பன்னிரண்டு மணி நேரத்திற்குள் எதிரிகளை அழிந்துபடச் செய்துவிட்டான் வல்லநாயன். வெற்றி வேந்தராக மதீனம் திரும்பினார்கள், நாயகம் (ஸல்) அவர்கள்.

அச்சமும் அழுகையும் அவமானமும் மேலிட்டவர்களாக உயிர் பிழைத்தால் போதுமென்றெண்ணி ஓடிய எஞ்சிய கூட்டத்திளர் மக்க மாநகரினுக்குள் தலை குனிந்த நிலையில் சென்று சேர்ந்தார்கள். மக்க மாநகரில் அழுகைக் குரல் எழாத குறைஷியர் குடும்பமே இல்லை. ஆனால், அபூசுப்யான் மனைவி 'ஹிந்தா' என்பாள் மட்டும் அழவேயில்லை. அவளுடைய கணவன் அபூசுப்யானுக்கு எவ்விதச் சேதமும் இல்லை என்றாலும் ஹிந்தாவின் தந்தை ஷைபா, சிறிய தந்தை, சகோதரர் வலீது என அவளின் உற்ற உறவினர்கள் மாண்டு மடிந்ததற்காகவாவது அவள் துக்கம் தாங்காது அழுதிருக்க வேண்டும். ஆனால், அவள் அழவேயில்லை. காரணம் 'ஹிந்தா'வின் மனத்தில் பழிதீர்க்கும் வைராக்கிய உணர்வு மிகைத்திருந்தது. எனவே, ஊர்ப் பெண்களெல்லாம் அழுதிடும்போது 'ஹிந்தா' மௌனமுற்றிருந்தாள். அவள் தன்னை அலங்கரித்துக்கொள்ளவில்லை; உடை மாற்றவில்லை; வெறிபிடித்த முகத்துடன் சீறிப் போயிருந்தாள்.

''என் உறவினர்களைக் கொன்றவர்களைப் பழி தீர்க்காதவரையில் என் கணவருடன் 'வீடுகூட்ப்' போவ

தில்லை'' என பகிரங்கமாக அறிவிப்புச் செய்தாள். அவ்வாறே செயல்படவும் செய்தாள்.

அபூஜஹில் உட்பட குறைஷியரின் பெருந்தலைவர்களெல்லாம் இறந்துவிட்டதால் அபூசுப்யான் தலைமை ஏற்க வேண்டியதாயிற்று. அவ்வாறு தலைமை ஏற்குங்கால் அவரும் ஒரு சபதம் செய்தார்: ''பத்ருப் போரின் விளைவுக்குப் பழி தீர்க்காத வரையில் பெண்ணுடன் உறவு கொள்வதால் ஏற்படும் தீட்டுக்குத் தலைமுழுகுவதில்லை'' என்பது அவருரைத்த சூளுரை. அவருடைய இந்தச் சூளுரை மனைவியைத் தவிரப் பல பெண்களோடு உறவு கொள்வதென்பது அப்போது அரபியருக்கு மிகச் சாதாரணமான செயலாகவேயிருந்தது என்பதையும் ஊர்ஜிதப்படுத்துவதாயிற்று. 'ஹிந்தா' தன் கணவரை மட்டுமன்றி ஊரிலுள்ள பிற ஆண்களைக் காணும்போதும், ''உங்களுக்கெல்லாம் ரோஷமில்லையா? பத்ருப் போருக்குப் பழி தீர்க்க வேண்டாவா?'' என மறுபோருக்கு அவர்களையும் கூர் தீட்டிக்கொண்டிருந்தாள். மற்ற பெண்களையும் அவ்விதமாகவே தூண்டுமாறும் செய்தும் வந்தாள்.

தலைமைப் பதவி தம்மிடமிருந்ததால் உடனடியாக நடவடிக்கை எடுத்திட வேண்டிய பொறுப்பு அபூசுப்யானிடமிருந்தது. எனவே, மதீனத்தின்மீது படையெடுத்திட இது தக்க தருணந்தானா, போரை மேற்கொண்டால் மதீனத்தில் உள்ள யூதக் கோத்திரத்தினர் தங்கட்கு உதவுவார்களா என்பதை அறிந்துகொள்ள வேண்டியது அபூசுப்யானுக்கு முதற்கடமையாக இருந்தது. எனவே தம்முடன் இருநூறு வீரர்களை அழைத்துக்கொண்டு இரகசியமாகப் புறப்பட்டார்.

மதீனாவிற்குச் சற்றுத் தொலைவிலுள்ள நீபு என்னும் மலையினிடை வந்து தங்கினார். தாமும் தம் வீரர்களும் வந்துள்ள செய்தி தெரியாவண்ணம் ஏற்பாடுகள் செய்து

கொண்ட பின்னர் ஓரிரவில் மாறுவேடமிட்டவராக மதீனா விற்குள் சென்றார்.

நடுநிசி! ஊரே உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது. யாரும் தம்மைக் கவனித்திடாதபடி மெதுவாக, பதுங்கிப் பதுங்கிச் சென்று பனுநுளையிம் எனும் யூதக் கூட்டத் தலைவனாகிய ஹுய்யு என்பானின் வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டினார்.

நள்ளிரவில் கதவைத் தட்டுவது யார் என்று வந்து பார்த்த ஹுய்யு, வந்திருப்பது அபூசுப்யான் என அறிந்த தும் கதவை மூடிவிட்டான். இதனால் அபூசுப்யான் அவமானமடைந்ததாகத் தெரியவில்லை. அடுத்து அக்கூட் டத்தின் இன்னொரு தலைவனான ஸலாமுப்னுமிஷ்கம் வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினார். அவன் கதவைத் திறந்து அபூசுப்யானை வீட்டினுள் இட்டுச் சென்றான். மதுபானம், உணவு போன்றவற்றை வழங்கி உபசரித் தான். அபூசுப்யான் வந்துள்ள நோக்கத்தை அறிந்ததும் மதீனாமீது போர் நடத்திட இது தக்க தருணமல்ல என இதமாக எடுத்துரைத்து எச்சரிக்கையாக மக்கா சென்று சேர்ந்திடுமாறு கூறி அனுப்பினான்.

மனச்சோர்வுடன் நீபு மலையினிடை வந்துற்ற அபூசுப்யான் தமது இருநூறு வீரர்களுடன் இரவோடிரவாக மக்க மாநகரினை நோக்கி ஓட்டம் பிடித்தார். செல்லும் போது சும்மா செல்லாமல் உடனுள்ள வீரர்களை உற்சாக மூட்டும் வகையில் அண்டையிலுள்ள சிற்றூர்கள் சிலவற்றி னுள் புகுந்து கொள்ளையும் அடித்துச் சென்றார்.

இந்தச் செய்தி மதீனாவிற்கெட்டியதும் சில தோழர் களுடன் நாயகம் (ஸல்) புறப்பட்டுச் சென்றார்கள். அபூசுப்யான் ஓடிவிட்டார் என அறிந்ததும் கொள்ளைக் குள்ளான கிராமத்தவர்கட்கு ஆறுதல் கூறிவிட்டுத் திருப்பி னார்கள்.

அபூசுப்யான் கூட்டம் தப்பி ஓடியபோது சுமந்து சென்றிட இயலா நிலையில் உணவுக்கெனக் கொண்டுவந்திருந்த மாவு மூட்டைகளை விட்டுவிட்டு ஓடியிருந்தது. அம்மூட்டைகளை நபித் தோழர்கள் கைப்பற்றிக்கொண்டு வந்தார்கள். போர் நடைபெறாவிட்டாலும் நாயகம் (ஸல்) அவர்களுக்கு மேலும் புகழைத் தேடித் தருவதாக அமைந்தது, அபூசுப்யானின் செயல். சுற்றுவட்டாரமெங்கும் இச்செய்தி பரவியபோது கீர்த்தி மிக்கவர்கள் நாயகம் (ஸல்) அவர்கள் எனும் சொல் மக்கள் வாயினின்றும் மகிழ்வுடன் வெளிப்பட்டது.

இது மக்க மாநகரினருக்கு ஏற்பட்ட இரண்டாவது தோல்வி. ஆனால், இது அதிக அளவில் பரவிடாதபடி பார்த்துக்கொண்டார் அபூசுப்யான். இந்த நிகழ்வினை ‘மாவுப் போர்’ என்பர். அரபியில் ‘கஸ்வத்துஸ் ஸவீக்’ என்பார்கள். இதனிடையே மக்கத்தில் ஹஜ் எனும் அரிய பெருநாள் ஆரம்பமாயிற்று.

## அபாயகரமான ரஜப்

நபி இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு இரண்டு மக்கள். இஸ்மாயீல், இஸ்ஹாக் என்பது அவ்விருவரின் பெயர்கள்.

இஸ்ஹாக்கின் வழித்தோன்றல்களே யூதர்கள். இவர்களை இஸ்ரவேலர்கள் எனவும் குறிப்பர். இஸ்மாயீல் வழியினர் இஸ்மாயீலியர் எனும் அரபியர். இவர்கள் பன்னிரண்டு பிரிவினர்களாக அரபுநாடு முற்றிலும் விரவி வாழ்ந்தனர்.

இஸ்மாயீல் நபிக்கு 12 மக்கள் என்பதே இந்த 12 பிரிவுக்குக் காரணம். ஹஜ்ஜின்போது இவர்களனைவரும் மக்காவில் வந்து கூடுவர். இது ஆண்டுதோறும் ஹஜ்ஜு மாதத்தில் நடைபெறும். வசதியுடையவர்கள் கூடாரம் அமைத்துத் தங்கிக்கொள்வார்கள். ஏனையோர்கள் மக்க மாநகரிலுள்ள இல்லங்களில் தங்குவது வழக்கம். குறைஷியர், வருவோரை வரவேற்றுத் தங்கிட இடம் நல்கி உபசரிப்பதில் மகிழ்வார்கள்.

ஹஜ்ஜு மாதம் முழுவதிலும் மக்க மாநகரம் (அக்காலத்தில்) அரபி இனத்தவரால் நிரம்பித் ததும்பும். பத்ருப் போர் நடந்த ஆண்டிலும் மதினத்தார் அல்லாத ஏனைய பகுதி அராபியர் வழக்கம் போன்று மக்க மாநகரில் வந்து குழுமினர். அவர்கள் கண்ட காட்சி மக்க மாநகரமே சோகத்தில் ஆழ்ந்து திகழ்வதாயிருந்தது. குறிப்பாக குறைஷிக் கோத்திரத்தாரின் இல்லங்களனைத்துமே சொல்லொணாத் துயரத்தில் ஆழ்ந்திருந்தன.

குறைஷியர் குதூகலத்தில் திகழ்பவர்கள். மகிழ்ச்சி ததும்பும் மனத்தவர். இதமான பேச்சுக்கும் இனிய உபசரிப்புக்கும் உறைவிடமானவர்கள். இந்த ஆண்டில் அதற்கு

மாற்றமாகத் திகழ்ந்தனர். இந்த நிலைக்குக் காரணம் முஹம்மது (ஸல்) அவர்கள்தாம் என அந்த அரபியர் தெரிந்துகொண்டனர். நடந்த நிகழ்ச்சிகளை முற்றிலுமாக அவர்கள் அறிந்தபோது அச்சமும் அவர்களை ஆட்கொள்ளச் செய்தது. காரணம் முஹம்மது (ஸல்) அவர்கள் பரப்புகின்ற புதிய மார்க்கநெறி விரிந்து பரவுமானால் அவ்வாறு பரவுவதைத் தாங்களும் எதிர்க்க நேரலாம். இந்த நிலை ஏற்பட்டால் தாங்களும் இவர்களையொத்த நிலைக்கு ஆளாகிட நேரலாம் என்பதே அவர்களின் அச்சத்திற்குக் காரணம்.

எனவே, வந்து குழுமிய அரபியர் அனைவருமே நாயகம் (ஸல்) அவர்களையும் இஸ்லாத்தையும் எதிர்த்திட வேண்டியது அவசியம் எனும் முடிவுக்கு வரவேண்டிய நிலைக்கு ஆளானார்கள். எனவே ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றித் திரும்பிய அரபியர் அனைவருமே அந்த எண்ணத்திற்கு ஆட்பட்டனர்.

இந்த நிலை உருவாகியிருப்பதை அறிந்த 'ஹிந்தா' எனும் பெண்மணி மட்டிலுமன்றி குறைஷிக் குலத்தவர் உள்ளிட்ட மக்க மாநகரினர் அனைவருமே மகிழ்ச்சிக்குள்ளாயினர். அரபு நாடே முஹம்மது (ஸல்) அவர்களுக்கு எதிர்ப்பாக எழுச்சியுற்றதாகிவிட்டதால் முஹம்மதை இனி நாம் வென்றழிப்பது எளிதேயென எண்ணி மனப் பூரிப்பு அடைந்தனர்.

இந்த புதிய நிலை கண்டு இறை நம்பிக்கையில் முற்றிலுமாக அழுந்தியுள்ள நாயகம் (ஸல்) அவர்கள் அஞ்சிடவில்லை. ஆனால் இது எட்டத்திலுள்ள ஊர்களில் ஏற்பட்டிருப்பதோடன்றி மதீன மாநகரினை அடுந்துள்ள கிராமங்களிலெல்லாங்கூடத் தோன்றியுள்ளதென அறிந்தபோது தற்காப்புச் செய்திட வேண்டிய அவசியத்தில் அவர்கள் இருந்தார்கள். வெளித்தோற்றத்தில் முஸ்லிம்களாகவும் மனத்தால் பகைவர்களாக (முனாஃபிக்குகளாக)வும் உள்ளோரும் யூதர்களும் மறைமுகமாக எதிரிகட்கு

உதவுவோராகத்திகழ்ந்தனர். சந்தர்ப்பம் வாய்க்குமானால் எதிரிகளுடன் இணைந்துகொண்டு தொல்லை தருவார்கள் என்பதையும் நாயகம் (ஸல்) அவர்கள் உணராமல் இல்லை. இந்த இருவகை நிலையையும் சமாளித்து இஸ்லாத்தை நிலைநாட்டும் பொறுப்பை இறைவன் தன் மீது சுமத்தியுள்ளான் என்பதை எண்ணியபோது இறை நம்பிக்கை அவர்களை மேலும் அழுத்தமாகப் பற்றிக் கொண்டது. இறைவன் தமக்களிக்கின்ற பொறுப்பை எண்ணி மகிழ்ந்து இறைவனுக்கு நன்றி செலுத்தினார்கள்.

மக்கமா நகர வாழ்வில் அந்நகர மக்களிடம் சன்மார்க்கப் பிரச்சாரம் செய்வதும் அதன் காரணமாக எதிரிகள் தருகின்ற தொல்லைகளைச் சகித்துக்கொள்வதும் மட்டுமே நாயகம் (ஸல்) அவர்களுடைய அவர்களைச் சார்ந்த ஸஹாபாக்களுடைய நிலையாகயிருந்தது. மதின மாநகருக்கு வந்த பிறகு அதுவும் பத்ருப் போரின் நிகழ்வுக்குப் பிறகு உட்பகை, யூதர்களின் மறைமுகப்பகை, அரபுநாட்டு மக்கள் அனைவரின் பகை ஆகிய மும்முனை எதிர்ப்புக் களைச் சமாளிக்கவேண்டிய நிலை தமக்கேற்பட்டிருப்பதை நாயகம் (ஸல்) அவர்கள் கண்டார்கள். என்றாலும், இறை நம்பிக்கை இவற்றைச் சமாளிப்பதற்கான முயற்சியில் அவர்களைத் துணிவுடன் ஈடுபட வைத்தது.

மக்காவாசிகளோ யூதர்களையும் முனாபிஃகுகளையும் அரபுநாட்டு மக்களையும் தங்களுக்கு ஆதரவாளர்களாக ஆக்கிக்கொண்டு அடுத்ததொரு பெரிய தாக்குதலுக்குத் தங்களைத் தயார்ப்படுத்திக்கொள்வதில் முனைப்புக் காட்டி நின்றனர்.

நாயகம் (ஸல்) அவர்களை எதிர்த்திடற்கென குறைஷியர், ஷாம் தேச வணிகத்தின்மூலம் அபூசுப்யான் ஈட்டி வந்த இலாபத்தொகை முற்றுமாக அவர்களின் பொதுச் சபையான தாருன்நத்வாவில் அப்படியே இருந்து வந்தது. அதை அவர்கள் அடுத்து நடத்தவுள்ள பெரும் படையெடுப்பிற்குப் பயன்படுத்த வைத்திருந்தனர். மதீன

மாநகரில் மட்டுமன்றி மதினா மாநகருக்கு அடுத்துள்ள ஊர்களுக்கும் சென்று, தங்களுக்கு நேர்ந்துள்ள இன்னல்களை எடுத்துக் கூறி நாயகம் (ஸல்) அவர்களுக்கு எதிரிடையாகவும் தங்களுக்கு ஆதரவு நல்கிடும் வகையிலும் செயல்படுமாறு அங்குள்ள மக்களை தூண்டுதல்படுத்திட குறைஷியர் தீவிர ஈடுபாடும் கொண்டிருந்தனர். இவர்களின் தூண்டுதலுக்கு ஆட்பட்டவர்களில் நஜத் எனும் பகுதி அரபியர்கள் முதலிடம் பெற்றிருந்தனர்.

ஹஜ்ஜு முடிந்து திரும்பியிருந்த நஜத் எனும் பகுதி மக்கள் தங்களுக்கு எதிர்ப்பாகச் செயல்படுகின்றனர் என்றும், பெரும்படையுடன் வந்து மதீனத்தை முற்றுகையிட்டு இறைதூதரான தம்மையும் தீன்மார்க்கத்தையும் அழித்தொழிக்க முயல்கின்றனர் என்றும் நாயகம் (ஸல்) அவர்கள் அறிந்தார்கள்.

இது போன்ற கிளர்ச்சிகளை முளையிலேயே கிள்ளி விடுவது நல்லது. இல்லையெனில் இந்நிலை விரிவடையும். பிறகு அதை அடக்குவது சிரமம் எனவும் முடிவு செய்தார்கள்.

அவர்களின் முடிவு செயல் வடிவம் பெற்றது.

மதீனத்து நிர்வாகப் பொறுப்பை உதுமானிப்னு அப்பான் (ரலி) அவர்கள் வசம் ஒப்படைத்துவிட்டு 450 தோழர்களுடன் அபாயகரமான நஜத் நோக்கிப் புறப்பட்டார்கள் நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள்.

படை நடத்தி வருகிறார்கள் நாயகம் (ஸல்) அவர்கள் எனும் செய்தியை நஜத் பகுதியில் வாழ்ந்து வந்த பனூதஃலபி, முஹாரிப் எனும் கோத்திரத்தினர் அறிந்திடலாயினர். நாயகம் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர்களுடன் நஜத் பகுதியிலுள்ள தீஅம்ரி எனும் இடத்தில் சென்று தங்கினார்கள். தஃலபி, முஹாரிப் எனும் இரு கோத்திரத்தையும் மதீனத்தின்மீது படை நடத்திச் சென்றிடற்குத் தூண்டிய தலைவன் பெயர் துஃதூருப்னுல் ஹாரிதில் முஹாரபி என்பதாகும். அவர் நாயகம் (ஸல்)

அவர்கள் படை நடத்தி வருகிறார்கள் எனும் செய்தி அறிந்ததும் அங்குள்ள மக்களனைவரையும் ஒன்றுதிரட்டி அழைத்துக்கொண்டு அருகிலுள்ள மலை ஒன்றில் ஏறி ஒடி ஒளிந்துகொண்டார். ஸபர் மாதம் முடியத் தங்கள் தோழர்களுடன் அவ்விடத்தில் தங்கியிருந்தார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். ஆனால், எதிரிகள் தென்படுவதாயில்லை. ஜப்பாருத் தஹ்லவி எனும் ஒருவர் மட்டும் பிடிபட்டார். நாயகம் (ஸல்) அவர்கள் முன்பு கொண்டுவரப்பட்டபோது அவர் தீனை ஏற்று இஸ்லாத்திலாகிவிட்டார். போரின்றியே நாயகம் (ஸல்) அவர்கள் மதீனம் திரும்ப வேண்டியதாயிற்று.

மதீனப்படை சென்றுவிட்டதென்பதை அறிந்து தம் முடனிருந்த அனைவருடனும் தம் ஊரினுள் சென்றார் துஹ்தூருப்னுல் ஹாரிதில் முஹாரபி. பின்பு இவர் நாயகம் (ஸல்) அவர்களின் அரிய குணங்களையும் அவர்களுக்குள்ள அரிய ஆற்றலையும் தீன்நெறியையும் அறிந்து இஸ்லாத்திலாகிவிட்டார். அதனால் நஜத் பகுதியில் தோன்றிய அபாயம் நீங்கிற்று. ஆனாலும் வேறு பல இடங்களில் இதனையொத்த எதிர்ப்புகள் தோன்றிடுமாறு செய்து கொண்டிருந்தனர் மக்காவாசிகளான குறைஷியர். (இப் படையெடுப்பை 'கஸ்வத்துல் தீ அம்ரீ' என்பர் அரபியில்).

'கஸ்வத்துல் தீ அம்ரீ' நிகழ்வுக்குப் பின்னர் நாயகம் (ஸல்) அவர்களின் மூன்றாவது மகளாரான சித்தி உம்மு குல்தூம் (ரலி) திருமணம் நடைபெற்றது. ஹல்ரத் உத்மான் இப்னு அப்பான் (ரலி) மணந்துகொண்டார். ஹல்ரத் உமர்கத்தாப் (ரலி) அவர்களின் மகளாரான ஹப்ஸா (ரலி) அவர்களை நாயகம் (ஸல்) அவர்கள் மணந்துகொண்டதும் இதுகாலைதான். ஹப்ஸா (ரலி) விதவை. இவர்களின் முதல் கணவரான குனைஸிப்னு ஹுதாபத்துச் சஷ்மி (ரலி) பத்ர் போரில் ஏற்பட்ட காயத்தால் மதீனா நகருக்கு வந்தபின் இறந்துபட்டார். ஹப்ஸாவுக்கு அதுகாலை வயது 20. ஹல்ரத் உமறுப்னு கத்தாப் அவர்களுக்கு உதவுகின்ற வகையில் ஹப்ஸாவை நாயகம் (ஸல்) அவர்கள் மணந்துகொண்டார்கள். இந்த இரு நன்னிகழ்வுகளுக்கிடையே கலகம் விளைவித்துக் கொண்டிருந்த யூதப் பெருந்தலைவர்கள் இருவர், ஒருவர் பின் ஒருவராகக் கொன்றொழிக்கப்பட்டனர். இந்த இரு யூதர்களுள் ஒருவன் பெயர் கஅப் இப்னுல் அஷ்ரப். இவன் தந்தை வழியில் அரபியன் தாய் வழியில் யூதன். பெரும் செல்வந்தன். சிறந்த கவிஞன். வெல்லற்கரிய வீரன். யூத மதத்தைச் சார்ந்து நின்றவன். இதன் காரணமாக இஸ்லாத்தைப் பகைப்பவன். நாயகம் (ஸல்) அவர்களையும் இஸ்லாமியப் பெண்களையும் இழித்தும் பழித்தும் பாடல் புனைந்தவன். அப்பாடல்களைப் பாடி மகிழ்பவன். பிறரைக்கொண்டு பாடச் சொல்லிக் கேட்டு இன்புறுபவன். அதுமட்டுமன்றி முஸ்லிம்களுக்கெதிராக ஏனையோரைத் தூண்டிவிட்டுக்கொண்டுமிருந்தான் வட்டி வணிகன். பண பலமும் உடல் வலுவும் அவனுடைய அறிவுப் புலனை

அழித்துவிட்டிருந்தன. இதனால் இஸ்லாத்தையும் நாயகம் (ஸல்) அவர்களையும் புரிந்துகொள்ள முடியாதவனாயிருந்தான். ஆணவப் பலம் மிகுத்து இஸ்லாமிய எதிர்ப்பில் ஈடுபட்டான். அதன் காரணமாக யூதர்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தான். வலுவான அரணமைத்து அதனுள்ளே அழகுப் பொலிவுடன் மாளிகையமைத்து வாழ்ந்து வந்தான். இவனது ஆபாசப் பாடல்களுக்கு ஹஸ்ஸான் இப்னு தாபித் எனும் இஸ்லாமியப் பெருங்கவிஞர் எதிர்ப்பாட்டுப் பாடி அடக்கினார். இஸ்லாத்துக்கெதிராக ஏனையோரைத் தூண்டிவிட்டுக்கொண்டிருந்தான் என்பதால் நாயகம் (ஸல்) அவர்களின் ஆசியுடன் நான்கு நபித் தோழர்கள் சென்றிவனைக் கொன்றொழித்தனர்.

இன்னொரு யூதப் பெருந்தலைவன் பெயர் இப்னு ஸுனைனா. இவனும் இஸ்லாமியப் பகைப்பில் கஅப் இப்னுல் அஷ்ரபை மிகைத்தவன். இவனும் கொல்லப் பட்டான். இந்நிகழ்வுக்குப் பின்னர் ஜைத் இப்னு ஹாரிதா தலைமையில் படையெடுப்பு நடத்தப்பட்டது.

மக்கத்துக் குரைஷியர் பத்ர் போருக்குப் பின்னர் வியாபாரத்துக்காக நஜத் வழியாக ஈராக்குக்கேகி அங்கிருந்து சிரியாவுக்குச் செல்ல ஆரம்பித்தனர். பாதை கரடு முரடாகவும் மேடுபள்ளமுடையதாகவும் பயணம் செய்யக் கடினமானதாகவும் இருந்ததாலும் இஸ்லாமியர்கள் வாழ்கின்ற மதீன மாநகரினுக்கு வெகுதொலைவில் இருந்ததாலும் அச்சமற்று அவ்வழியேகிடலாம் எனும் கணிப்பே இப்பாட்டை மாற்றத்திற்கு முதற்காரணம். இரண்டாவது காரணம், செல்லுகின்ற வழியிலுள்ள கிராம மக்களையும் ஈராக்கினரையும் இஸ்லாத்திற்கு எதிராகத் தூண்டிவிட முடியும் என்ற நம்பிக்கை. இந்த இரு காரணங்களாலும் பாதை மாற்றம் கண்ட குரைஷியரின் முதல் வணிகக் கூட்டத்திற்கு வழிகாட்டியாக அல்அஸ்வதுப்னு அப்துல் முத்தலிப் சென்றார். ஸப்வான் இப்னு உமையா லட்சம் திருஹத்திற்கு மேற்பட்ட தொகைக்கு விற்பனைப் பண்டங்

களுடனும் வெள்ளிப் பாளங்களுடனும் பயணத்திற்குத் தயாரானார். இவருடன் சென்ற இதர வணிகர்களுள் முக்கியமானவர்கள் அல்அஸ்வதுப்னு, அப்துல் முத்தலிப், அபூசுப்யான், உபைதிப்னு அப்துல் உஸ்ஸப்பாப்னுப்னு உமையா ஆகிய தலைவர்களின் பெயர்கள் குறிக்கப்படுகின்றன. பணியாள்களாகவும் எதிர்ப்படும் எதிரிகளை வெல்லுகின்ற படையினராகவும் இந்தத்தலைவர்களுடன் வெகுபேர் இணைந்து சென்றனர். இவர்களுடன் பொருது இவர்கள் கொண்டுசெல்கின்ற பண்டத்தையும் செல்வத்தையும் பறிமுதல் செய்வதன்மூலம் பொருளாதார முற்றுகை நடத்திட எண்ணிய நாயகம் (ஸல்) அவர்கள், ஜைதுப்னு ஹாரிதா தலைமையில் நூறு வீரர்களை அனுப்பினார்கள். இந்த நூற்றொருவரும் நஜத் செல்லும் பாட்டையில் நீர் வளமுடைய அல்கர்த் தலத்தில் சென்று தங்கி, வணிகக் கூட்டத்தை எதிர்பார்த்திருந்தார்கள்.

அவர்கள் எதிர்பார்த்த மக்கத்தின் வணிகக் கூட்டம் பெருத்த பாதுகாப்புடன் வருவதைக் கண்ட ஜைத் பின் ஹாரிதா, எதிரிகள் எதிர்பாராதவகையில் அவர்களை வழி மறித்துத் தாக்குதல் நடத்தினார். அத்தாக்குதலுக்கு ஈடு கொடுக்க இயலா நிலையில், கொண்டுவந்த பண்டங்களையும் பொருள்களையும் விட்டுவிட்டு மக்கமாநகர் நோக்கி ஓடலானார்கள், அபூசுப்யான், ஸப்பாணிப்னு உமையா, ஹுவைதுப்னுல் அப்துல் உஸ்ஸா, அல்அஸ்வதுப்னுல் அப்துல் முத்தலிப் போன்ற தலைவர்கள். அவர்களுடன் இணைந்து வந்த பணியாள்களும் படை வீரர்களும் தலைவர்களைப் பின்பற்றி ஓடலாயினர். அவர்கள் விட்டுச் சென்ற பண்டங்களையும் வெள்ளிப் பாளங்களையும் பொருள்களையும் இதரவற்றையும் கைப்பற்றியவராக ஜைதுப்னு ஹாரிதா தம் தோழர்களுடன் வெற்றியாளராக மதீனம் வந்தடைந்தார். அவர் கொண்டுவந்த பண்டங்களையும் இதரவற்றையும் இஸ்லாமியர்கள் அனைவருக்கும் முறைப்படி பகிர்ந்தளித்தார்கள், நாயகம் (ஸல்) அவர்கள்.

இந்நிகழ்வுக்குப் பின்னர் ஹிஜ்ரீ மூன்றாம் ஆண்டு ஷவ்வால் மாதம் பிறை 15 சனிக்கிழமையன்று உஹதுப் போர் ஆரம்பமாகின்றது. ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டில் தான் ரமலான் நோன்பு கடமையென வஹீ வந்தது. ஜகாத் கடமையென அறிவிப்பாயிற்று. யூதர்களுடன் உறவு வேண்டாமென்னும் இறையறிவிப்பு வசனம் இறைவனால் அருளப்பெற்றது. பத்ர் போர் தொடக்கம் ஹிஜ்ரீ 2ஆம் ஆண்டு ரமலான் பிறை 17இல்! அதன் பின்னர் ஹிஜ்ரீ மூன்றாம் ஆண்டு ஷவ்வால் மாதம் பிறை 15 வரை நடந்த நிகழ்வுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

அடுத்து, உஹதுப் போரின் தொடக்கமும் முடிவும் விளக்கமாகத் தரப்பட வேண்டும். இன்ஷா அல்லாஹ்!

பத்ர் போர் ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டு ரமலான் பிறை 17இல் நடந்தது. அதன் பின்னர் ஹிஜ்ரி மூன்றாம் ஆண்டு ஷவ்வால் பிறை 15 சனிக்கிழமையன்று உஹதுப் போர் ஆரம்பமாகின்றது. இதற்கிடைப்பட்ட காலத்தே நடந்த நிகழ்வுகளைத் தொகுத்து, சென்ற அத்தியாயத்தில் தந்தோம். ஆனால் அவற்றுள் ஹிஜ்ரி மூன்றாம் ஆண்டில் உஸைமா மகளாரான ஜெய்னம்பு (ரலி) அவர்களை நாயகம் (ஸல்) அவர்கள் மணந்துகொண்டதும் பாத்திமா நாயகியாருக்கு முதல் குழந்தை ஹுஸைன் (ரலி) பிறந்ததும் விடுபட்டுள்ளது.

ஹுஸைன் (ரலி) பிறப்புபற்றி அரிய கவிதைகளில் நடந்த நிகழ்வுகளை அழகுறக் கூறுவார் உமறுப்புலவர்.

இரண்டு ஜெய்னம்பு நாச்சியார்களை நாயகம் (ஸல்) அவர்கள் மணந்துள்ளார்கள். ஒருவர், தம் மாமி மகள் ஜெய்னம்பு. இவர்களை மணந்ததுபற்றிப் பின்னர் விரித்துரைக்கப்படும். இங்கே கூறப்படுகின்ற ஜெய்னம்பு நாச்சியார் உஸைமாவின் மகள். இவர்களை உபைதா இப்னு ஹாரிதா (ரலி) மணந்திருந்தார். இவர் பத்ர் போரில் மரணமெய்தினார். எனவே ஜெய்னம்பு நாச்சியார் விதவையானார்கள். வறுமை வாழ்வினர். நடுத்தர வயதுடையவர்கள். குழந்தைகளும் உண்டு. இவர்களின் நிலையறிந்த நாயகம் (ஸல்) அவர்கள் இரக்கமுற்று இவர்களை மணந்துகொண்டார்கள். இதன் பின்னரே உஹதுப் போர் ஆரம்பமாகிறது.

பத்ர் போர் மக்கத்தினரான குறைஷியர்க்குப் பெரும் தோல்வியையும் மான இழப்பையும் உண்டாக்கிற்று. அதன் பின்னர் நடந்த சிறுசிறு போர்களிலும் தோல்வியைத் தழுவியதுடன் பொருள் இழப்பையும் அவர்கள் ஏற்றிட

நேர்ந்தது. எனவே, மக்கத்துக் குரைஷியர்க்கு முன்னிலும் பன்மடங்கு கோபமும் ஆத்திரமும் ஏற்பட்டன. எப்படியும் முஸ்லிம்களை ஒழித்தே தீருவது என முனைப்புற்றனர். இம்முனைப்பேற்படற்குத் தூண்டுகோலாக அபூசுப்யா னின் மனைவியான ஹிந்தா என்கின்ற பெண் பெருமளவில் காரணமாயிருந்தாள்.

இந்த ஹிந்தா அபூசுப்யானுடைய மனைவி என்பதுடன் பத்ர் போரில் தலைமைத் தளபதியாக விளங்கிய உத்பாவின் மகள். இன்னொரு தளபதியான ஸைபா, ஹிந்தாவின் சிறிய தந்தை. ஹிந்தாவின் சகோதரர் உமையாவும் பத்ர் போரில் உயிரிழந்தார். எனவே, பத்ர் நிகழ்விற்குப் பழிவாங்கிடும் எண்ணம் ஹிந்தாவிடம் மிகைத்திருந்தது. சதா பத்ர் போர் பற்றியே நினைப்பு. அந்நிகழ்வுகளை நினைக்கும்போதெல்லாம் அவள் மனம் குமுறும். பதைத்தெழுவாள். தூக்கமின்றிச் சிந்திப்பாள். சந்திப்போரிடமெல்லாம் பழிவாங்கிடும் எண்ணம் மேலோங்கும் வகையில் பிரச்சாரம் செய்வாள். பத்ர் போருக்குப் பழிவாங்காதவரை தன் கணவருடன் வீடு கூடுவதில்லையெனச் சூளுரைத்தாள் என்றால் அவள் மனத்தின் பாதிப்பு துலங்கும்.

மாவுப் போரிலும் நஜத் செல்லும் வழியிலுள்ள அல்கார்த் எனும் இடத்திலும் அபூசுப்யான் போரில் ஈடுபட்டுத் தோல்வியுறக் காரணமாயிருந்தவளும் ஹிந்தாவே ஆகும்.

நாயகம் (ஸல்) அவர்கள் பெற்று வரும் இம்மாபெரும் வெற்றியெல்லாம் அவள் மனததில் அம்புபோல் பாய்ந்து தாக்குதல் நடத்தின எனவே, மக்க மாநகரில் கண்டோரிடமெல்லாம் நாயகம் (ஸல்) அவர்களை இழித்தும் பழித்தும் பேசிப் போரிட வேண்டுமெனும் எண்ணத்தைத் தூண்டி வந்தாள். குரைஷியர்க்கும் இழந்த தங்களின் மானத்தை மீட்டுக்கொள்ள மதீனத்தின்மீது போர் தொடுப்பது அவசியமாயிருந்தது. இதுபற்றிக் கூடி ஆலோ

சித்தனர். போருக்கு வேண்டிய செலவுத் தொகைபற்றிக் கவலைப்படவேண்டிய நிலையில் அவர்கள் இல்லை. சிரியா வணிகத்தில் கிடைத்த ஆதாயத் தொகையான ஐம்பதினாயிரம் தங்க நாணயங்கள் அவர்களின் பொதுச் சபையான தாருன் நத்வாவின் பாதுகாப்பில் இருந்தன. லாபமாகக் கிட்டிய ஆயிரம் ஒட்டகங்களும் இருந்தன என்றும் சொல்லப்படும். அந்தப் பணத்தைக்கொண்டு படை திரட்டல் நடைபெற்றது. பொறுப்பு வாய்ந்த குரைஷித் தலைவர்களெல்லாரும் படை திரட்டவும் போரில் ஈடுபடவும் முனைந்து முன்வந்தனர்.

அபூஜஹ்லின் மகன் இக்ரிமா, வலீது மகன் காலித் (காலித்பின் வலீத்), அப்துல்லாஹ் இப்னு அபீரபீஆ, ஹுவைத் இப்னு அப்துல் உஸ்ஸா, அல்ஹாரித் இப்னு ஹிஷாம் போன்றோர் இதில் முக்கியமானவர்களாகப் பேசப்படுவர்.

உணர்ச்சியூட்டும் வகையில் பிரச்சாரங்கள் நடைபெற்றன. இதில் பெண்களையும் ஈடுபட வைத்தாள் ஹிந்தா. இவளுக்கு உறுதுணையாக இருந்த பெண்களுள் இக்ரிமாவின் மனைவியும் அபூஜஹ்லின் மருமகளுமான உம்மு ஹக்கீம் என்பவளும் காலித் இப்னு வலீதின் தங்கை பாத்திமாவும் அம்ருப்னுல் ஆஸ் என்பாரின் மனைவி ரீத்தாவும் முஸ்அபிப்னு உபை (ரலி) அவர்களின் தாயாராகிய ஹன்னாஸ் ஆகியோரும் குறிப்பிடத் தக்கவர்கள். மக்கத்திலுள்ள குரைஷியரல்லாத கோத்திரத்தார்களையும் போரில் ஈடுபடவைத்திடும் முயற்சியில் ஆண்களுடன் போட்டியிட்டுக்கொண்டு மேலே குறிப்பிட்டுள்ள பெண்களும் ஈடுபட்டனர் இப்பெண்களின் எண்ணிக்கை பதினேழு எனக் குறிக்கப்படுகிறது.

யுத்தத்திற்கு ஆள் சேர்த்திடும் பிரசாரத்தில் கவிதைகளைப் பாடி உற்சாகமூட்டிடக் கவிஞர்களும் பயன்படுத்தப்பட்டனர். இக்கவிஞர்களுள் ஒருவர் பத்ர் போரில் ஈடுபட்டுப் பிடிபட்டு மதீன நகருக்குக் கொண்டுவரப்பட்டவ

ராவர், அவர் ஏழைக் கவிஞர் என்கின்ற காரணத்தால் நாயகம் (ஸல்) அவர்களால் மன்னித்து அனுப்பப்பட்டவர். இவர் பெயர் அபூ அஸத்அல் ஜம்ஹீ என்பதாகும். இனி, போரில் தாம் ஈடுபடுவதில்லையென்றும், போரில் ஈடுபடு வோர்க்கு உதவி செய்வதில்லை என்றும் இவர் உறுதி யளித்ததன் பேரில் விடுதலை பெற்றிருந்தார். எனவே, மேற்கூறிய வாசகத்தைச் சுட்டிக்காட்டி, தாம் நாயகம் (ஸல்) அவர்களுக்கு எதிரிடையாகப் படை திரட்ட உதவு வோனாக இருக்க முடியாது என முதலில் மறுத்தார். ஆனால், ஸப்பானுப்னு உமையா திரும்பத் திரும்ப வற் புறுத்தியதாலும் ஆசை காட்டியதாலும் போருக்கு ஆள் திரட்டக் கவி பாடி வீர எழுச்சியூட்டற்கு ஒப்புக்கொண்டு அதில் ஈடுபட்டார். இவருடன் முஸாஃபிக் என்பாரும் சேர்ந்துகொண்டார்.

பத்ர் போரில் தங்களணியில் பெரும்வீரர்கள் ஆயிரம் பேரிருந்தும் மிகச் சாதாரணமான 313 பேரிடம் தோற்றுப்போனதாலும், பின்னர் நடந்த சிறுசிறு போர் களில் முஸ்லிம்களை வெல்ல முடியாது போனதாலும், இம் முறை பலத்த படையணியுடன் சென்றால்தான் முஹம் மதை வெல்ல முடியும் என்பது மக்கத்துக் குரைஷியரின் கணிப்பு. எனவே, ஆள் திரட்டும் பணி வேகமாய் நடந் தது. சுமார் மூவாயிரம் பேர்கள்வரை திரட்டப்பட்டனர். குதிரைப்படை, வாள்படை, வில்வல்லார்கள், அம்பெய் தும் ஆற்றலர், காலாட்படையெனப் பல படையணிகளும் பாடல் ஆடல் போன்றவற்றால் போர் வீரர்களிடம் வீர வெறியூட்டிடப் பெண்களும் ஒட்டகங்கள்மீது உணவுப் பண்டங்களும் தயாராயின. இப்போருக்கு தலைமை தாங் கிய அபூசுப்யான் திரண்டிருக்கும் படையைப் பார்த்து, 'வெற்றி நமதே' என மகிழ்வுற்றார். படை புறப்படத் தயா ராயிற்று. இந்தப் படையெடுப்பு பற்றிய முழு விவரத்தை யும் நாயகம் (ஸல்) அவர்களின் சிறிய தந்தையான அப்பாஸ் (ரலி) அவர்கள் கிபாரி கோத்திரத்தார் ஒருவர்

மூலம் கடிதம் வரைந்து அனுப்பி நாயகம் (ஸல்) அவர்களுக்குத் தெரிவித்தார்கள்.

அப்பாஸ் (ரலி) அவர்கள் இந்தப் போரில் ஈடுபட வில்லை. கலந்துகொள்ளாமைக்கு அவர்கள் கூறிய காரணம் பத்ர் போரில் தாம் ஈடுபட்டதையும் பிடிபட்டதையும், பிடிபட்ட தம் உறவினர்களுக்கெல்லாம் நட்ட ஈடு வழங்கிப் பொருளிழப்பிற்கு உள்ளாகியிருப்பதையும் கூறினர் என்பர். ஆனால், அவர்கள் மதீனத்தில் போர்க் கைதியாகப் பிடிபட்டிருந்த போதே கலிமா மொழிந்து தீனுல் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டிருந்தார்கள் என்பதே உண்மையாகும். இந்தப் போரில் தம் அடிமையும் ஈட்டி எறிவதில் வல்லவனுமான வஹ்ஷி எனும் நீக்ரோ அடிமையை ஈடுபடுமாறு ஜுபைர் இப்னு முத்இம் என்பவர் அனுப்பி வைத்தார். இவனை அவ்வாறு அவர் அனுப்பக் காரணம் துஆமத் இப்னு அதி என்னும் பேருடைய இவரின் சிறிய தந்தையை பத்ர் போரில் இழந்திருந்தார். ஹம்ஸா (ரலி) அவர்களாலேயே தம் சிறிய தந்தை உயிரிழந்தார் என்பதால் இதற்குப் பகரமாக ஹம்ஸாவைக் கொன்றுவிட்டால் அடிமை நீக்கம் செய்கிறேன் என்று ஆசை காட்டியிருந்தார். மக்கத்தின் இந்தப் பெரும் படை எடுப்பு மதீன மாநகரினை நோக்கிச்செல்லலாயிற்று.

ஹிஜ்ரீ 3ஆம் ஆண்டு ஷவ்வால் பிறை 5 மக்கத்துக் குறைஷியர் படை மதீனமா நகரை நோக்கிப் புறப்பட்டது. இப்படையெடுப்பின் நோக்கம் பத்ர் போருக்குப் பழி தீர்ப்பது என்பது மட்டுமன்றி நாயகம் (ஸல்) அவர்களை யும் தீனவர்களையும் தீன் மார்க்கத்தையும் அடியுடன் அழித்து ஒழித்துவிடுவது என்பதுமாகும்.

இப்படைக்கு அபூசுப்யான் தலைவர். அபூஜஹ்லின் மகன் இக்ரிமாவும் காலித்பின் வலீதும் துணைத்தளபதிகள். குறைஷியரில் மட்டும் மூவாயிரம் பேர் திரண்டிருந்தனர். இவர்களுள் 700 பேர் உருக்குச் சட்டை அணிந்த வீரர்கள். ஐந்நூறுக்கும் அதிகமான பேர் குதிரைப்படையினர், மற்றும் வாள் வீச்சினர், அம்பெய்வோர், ஈட்டி எறிவோர், கவண் கல் வீச்சினர் என ஏராளமான மாவீரர்கள், யூதர்கள், அண்டை அயல் ஊரவர்களான அரபியர், குறைஷியரல்லாத மக்கத்திலுள்ள மற்ற இனக் கோத்திரத்தவர் என 2000 பேர். ஆக, 5000 பேர் இப்படையெடுப்பில் ஈடுபட்டிருந்தனரென வரலாறு பேசும்!

இந்த மாபெரும் படையினரை ஆடிப்பாடி மகிழ்விக்கவும் வீரர்கள் சோர்வுற்ற காலை வீர வெறியூட்டும் பாடல்களைப் பாடி எதிரிகளைச் சாடிடச் செய்வதற்கென மங்கையரும் ஏகினர். இப்பெண்களுள் 17 பேர் உயர்குலப் பெண்களான குறைஷிப் பெண்கள். இதர பெண்கள் பலர். இப்பெண்களின் தலைவி அபூசுப்யானின் மனைவியான ஹிந்தா எனும் பெண்மணி.

போர்ப்பறைகளான டங்கா, டமாரம், முரசம், முழவு, கொம்பு, எக்காளம், தப்பட்டை போன்றவையும் அவற்றை முழக்குகின்றவர்களும் ஏராளம்.

இப்படையணி செல்வதைக் காண ஆங்காங்கேயுள்ள கிராம மக்கள் பெருமளவில் கூடினர். இப்படையை வெல்ல எப்படை உண்டு என்றும் பேசினர். நாங்களும் வருகின்றோம் எனப் புறப்பட்ட கிராமத்தார்களும் உண்டு. இவர்களுள் மக்க மாநகருக்கு அண்மையிலுள்ள ஹுபைஷ் என்கின்ற மலையடிவாரத்தவர்களான பனீ முஷ்தரக் கோத்திரத்தாரையும் பனூ குஹானிப்னு குஜைமா கோத்திரத்தாரையும் குறிப்பிடலாம். மற்றும் அபூ ஆமிரி அர்ராஹில் எனும் யூத மதப் பெருவீரர் 70 குதிரை வீரர்களுடன் இப்படையில் கலந்துகொண்டதை யும் குறிப்பிடலாம்.

இந்த அர்ராஹிப் எனும் யூத அறிஞரின் மகன் ஹன்லலா என்பவர் தீனவராகி நாயகம் (ஸல்) அவர்களுடன் இருந்தார். அதன் காரணமாகவும் இவர் குறைஷிப் படையினருடன் இணைந்தார் எனவும் கூறப்படும். எனவே, தனையனை எதிர்த்துத் தந்தை போருக்கெழுந்தார் எனவும் கூறலாம்.

இவ்வாறாக ஷவ்வால் பிறை 5 இல் புறப்பட்ட குறைஷிப் படை பிறை 12 இல் மதீனத்துக்கு 5 கல் தொலைவிலுள்ள வதிய்யுல் அக்கில் எனுமிடத்தில் வந்து தங்கிற்று.

குறைஷிப்படை புறப்பட்டு வரும் செய்தியை அப்பாஸ் (ரலி) ஆள்மூலம் தகவல் தந்திருந்ததால் நாயகம் (ஸல்) அவர்கள் எச்சரிக்கையோடு எதிர்பார்த்திருந்தார்கள். வதியுல் அக்கில் மதீனப்படை வந்துள்ளதென அறிந்தார்கள். உண்மையை அறிந்துவர ஆள் அனுப்பினார்கள். சென்று திரும்பியோர் படையணியையும் அதன் பெருக்கத்தையும் ஆயுத பலத்தையும் விளக்கியுரைத்தார்கள். அதுமட்டுமன்றி வெற்றிநமதே எனும் மமதையில் ஆடிப் பாடி, களிப்புற்று மகிழ்ந்திருக்கின்றனர் என்பதையும் எடுத்தியம்பினர். அவர்கள் தந்த தகவல் அப்பாஸ் (ரலி) அவர்களது கடிதக் குறிப்பின்படியே உள்ளதென்பதை மெய்ப்பிப்பதாயிற்று.

நாயகம் (ஸல்) அவர்கள் தங்கள் ஸஹாபாக்களை உடனடியாக அழைத்துக் கலந்தாலோசித்தார்கள். இந்தத் தடவை முனாஃபிக்குகளின் தலைவனான அப்துல்லாஹ் இப்னு உபையும் அழைக்கப்பட்டிருந்தான். மக்கத்துப் படை வந்துள்ளதென அறிந்த அன்சாரிப் பெரியவர்கள் மட்டுமன்றி வாலிபர்களும் சிறார்களுங்கூட இப்போரில் பங்கேற்றிடத் துடிப்புடன் முன்வந்தார்கள். மதீனத்துப் பெண்களும் இப்படையெடுப்பறிந்து கொதிப்புற்றனர்.

வாதிய்யுல் அக்கில் எனுமிடத்தில் பாடி வீடமைத்துத் தங்கியிருந்த குறைஷியர் படை உஹது மலையிடத்தே வந்திடலாயிற்று.

உஹது என்பது மலையின் பெயர். ஒற்றை மலை அல்லது தனித்த மலை என்பது இதன் பொருள். ஆங்குள்ள மலைத்தொடர்களைவிட்டுத் தனித்திருந்ததால் இப் பெயர் ஏற்பட்டது. உஹது மலைக்கும் மதீன மாநகருக்கும் இடையிலுள்ள தூரம் 3 கல்; அவ்வளவே. இம்மலையடி வாரத்தில்தான் மூஸா (அலை) அவர்களின் சகோதரர் ஹாரூன் (அலை) அவர்களின் அடக்கத்தலமும் உள்ளது.

எதிரியின் படை அண்மித்துவிட்டதால் நாயகம் (ஸல்) அவர்கள் எதிர்த்தாக்குதலுக்குத் தயாராக வேண்டிய கட்டாயத்திலிருந்தார்கள். ஆம்! அவர்கள் போரினை விரும்புகிறவர்களல்லர். படையெடுப்பு தங்கள் மீது வலிய திணிக்கப்படின் அது கண்டு ஓய்ந்திருப்பவர்களுமல்லர். எனவே, மதீனத்திலுள்ள நபவி பள்ளியில் அவசர ஆலோசனைக் கூட்டம் நடத்தினார். எதிர்த்துப் போரிடுவது அவசியம் என்பதில் இருவேறு கருத்துடையோர் யாருமில்லை. எதிரிகளைச் சென்று தாக்குவதா, அவர்கள் மதீனத்தைத் தாக்கியபின் தாக்குவதா என்பதில் இரு வேறு கருத்துகள் இருந்தன.

முனாபிக்குகளின் தலைவன் அப்துல்லாஹ் இப்னு உபை, வந்தபின் தாக்குவதே சரி என்றான். அதற்கு அவன் கூறிய காரணம், மதீனத்தவர் வெளியேறி எதிரி

களைத் தாக்கிய போதெல்லாம் தோல்வியே ஏற்பட்டது. அவ்வாறு வெளியேறாது, வந்த எதிரிப்படையைச் சந்தித்த போதெல்லாம் வெற்றியே கிட்டியதென்பதாகும். அன்சாரிகளிலுள்ள முதியவர்களும் அப்துல்லாஹ் இப்னு உபை உரைப்பது உண்மை என்றே சான்றுரைத்தனர். குறைஷியர் மதீனத்தை வந்து தாக்கும்வரை நாம் பொறுத்திருக்கலாம், வெளியேறித் தாக்குதல் நடத்தத் தேவையில்லை என்பதே அவர்களின் கருத்தாகவுமிருந்தது. ஆனால், அதை முழுமையாக நாயகம் (ஸல்) அவர்களிடம் சொல்லிவிடவில்லை. அச்சத்துடன் தயங்கித் தயங்கியே உரைத்தனர்; பெருமானார் மீது அவர்கள் கொண்டிருந்த பெருமதிப்பே தயக்கத்திற்குக் காரணம்.

இளைஞர்களின் கருத்து இதற்கு மாறாயிருந்தது. பத்ர் எனுமிடம் வரை வெளியேறிச் சென்று தாக்கி நாம் வெற்றி பெறவில்லையா எனப் பகர்ந்தனர்! சென்ற முறை வெளியேறித் தாக்குதல் நடத்திய நாம் இம்முறை வரட்டும் வாசல்வரை எதிரிப்படை என இருந்தால் பயந்துவிட்டோம் என எதிரிகள் எண்ணமாட்டார்களா நாம் வீரமற்றவர்கள் எனக் கேலி பேச மாட்டார்களா எனவும் கேட்டனர். இவர்களின் கூற்றை ஹம்ஸா இப்னு அபீதாலிப் எனும் பெருமானாரின் சிறிய தந்தையார் முற்றுமாக ஆதரித்தார்கள். தங்கள் ஆதரவில் உறுதியாகவுமிருந்தார்கள்.

அபூபக்கர் ஸித்தீக் (ரலி), உமரிப்னு கத்தாப் (ரலி), உதுமான் இப்னு அப்பான் (ரலி) அலீ இப்னு அபீதாலிப் (ரலி) போன்ற நெருக்கத் தோழர்கள் அனைவரும் நாயகம் (ஸல்) அவர்களின் முடிவையே எதிர்பார்த்தார்கள். அன்சாரித் தலைவர்களும் பெருமானார் காட்டுகின்ற வழியில் செல்வதற்குத் தயாராயிருந்தார்கள்.

ஷவ்வால் பிறை 15 வந்தது. அன்று வெள்ளிக்கிழமை. நபவி பள்ளியில் ஜும்ஆ தொழுகை நடந்தேறியது.

நடத்தி வைத்தார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். அதன் பின் அவர்கள் தம் இல்லத்தினுள் சென்றார்கள். அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களும் உமரிப்னு கத்தாப் (ரலி) அவர்களும் உடன் சென்றார்கள். இருவரும் நாயகம் (ஸல்) அவர்களின் விருப்பப்படி அவர்களுக்குப் போராடை அணிவித்தார்கள், வாள், வில் போன்றவற்றையும் பூட்டுவித்தார்கள். பள்ளி வாசலினுள் வந்த நாயகம் (ஸல்) அவர்களைக் கண்ட நபித் தோழர்களனைவரும் மகிழ்ச்சியும் வீரப்பொலிவுமுற்றனர்.

“இப்பொழுது நாம் எதிரிகளைச் சந்திக்க உஹது மலை நோக்கிப் புறப்படுகிறோம்” என்றார்கள் நாயகப் பேரொளி அவர்கள். கேட்டோரனைவரும் ஏக குரலில் நாரே தக்பீர் அல்லாஹு அக்பர் என முழக்கமிட்டார்கள். சற்று நேரத்திற்கெல்லாம் 700 பேர் ஆயுதமேந்திப் போருடை தரித்தவர்களாக நாயகம் (ஸல்) அவர்களை வந்து சந்தித்தார்கள். அஸர் தொழுகைக்குப்பின் அனைவரும் உஹது நோக்கிப் புறப்பட்டார்கள். இவர்களுள் உருக்குச்சட்டை அணிந்தோர் சிலரே. ஏறுவாகனமாக இரண்டு குதிரைகள் இருந்ததென்பர். கொடியேந்தி கொட்டு முழக்கம் எதுவுமின்றி மதீனத்திலுள்ள தீனவர் பட்டாளம் நாயகம் (ஸல்) அவர்கள் தலைமையில் உஹது மலைக்கு அண்மையிலுள்ள மேடொன்றில் சென்று தங்கிற்று. அப்துல்லாஹ் இப்னு உபை தலைமையில் முனாபிக்குகளும் யூதக்குடியிருப்பினரும் அடுத்தோடரித்தில் தனித்துத் தங்கினர்.

## நயவஞ்சகன் அப்துல்லாஹ் இப்னு உபை

இரவு முற்றும் அஷ்ஷைஹா னீ எனும் மேட்டின்மீது தம் தோழர்கள் எழுநூறு பேருடன் தங்கியிருந்தார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். மறுநாள் காலை சுபுஹ் தொழுகைக்குப் பின்னர் அங்கிருந்து உஹுத் மலையை நோக்கிப் புறப்படத் தயாரானார்கள். அது போது அடுத்துள்ள மேட்டின்மிசை ஒரு கூட்டம் இருப்பதைக் கண்டார்கள். கூர்ந்து நோக்கியபோது அது அப்துல்லாஹ் இப்னு உபை தலைமையிலான முனாஃபிக்குகளும் அவர்களின் ஆதரவாளர்களான யூதர்களின் கூட்டமும் என அறிந்தார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உபை என்பவன் மதீனத்துவாசி. ஆங்குள்ள அரபியர்கள் அனைவருக்கும் தலைவனாகிடத் திட்டமிட்டிருந்தான். நாயகம் (ஸல்) அவர்கள் மதீனத்துக்கு வந்திராவிட்டால் அவனது அந்த ஆசை நிறைவேறியிருக்கலாம். அவர்கள் வரவால் அவனுடைய எண்ணம் நிறைவேறாமல் போயிற்று.

நாயகம் (ஸல்) அவர்கள் வரவால்தான் தனக்கு தலைமை கிட்டவில்லை என்ற நினைவும் வருத்தமும், அவனைவிட்டு (கடைசிவரை) அகலவேயில்லை. என்றாலும், அதை வெளிக்காட்டிக்கொள்ளாமல், ‘ஊருடன் ஒத்துப்போ’ என்பதற்கிணங்க முஸ்லிம் மார்க்கத்தில் இணைந்துகொண்டதாகப் பாவனை செய்துகொண்டிருந்தான். ஆனால், மனத்தினுள்ளாக வெறுப்பை நாளுக்கு நாள் வளர்ப்பவனாகவேயிருந்தான். அவனை ஆதரிக்கின்ற கூட்டம் ஒன்றிருந்தது. அவன் அந்தக் கோத்திரத்தின் தலைவனுங்கூட. அவர்களுங்கூட இஸ்லாத்தில் இணைந்துவிட்டதாகப் பாசாங்கு செய்தார்கள். ஆனால் அந்தரங்கத்தில் அவனையே ஆதரித்தார்கள். இந்த அப்துல்லாஹ் இப்னு உபை என்பவரின் மகன் உண்மையான

முஸ்லிம். இப்படிச் சிலரல்ல, பலர் அவனுடைய கோத்தி ரத்தார்கள் உண்மை முஸ்லிம்களாகி நபித்தோழர்களாக விளங்கினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உபை நயவஞ்சகன். உள் ளொன்று வைத்துப் புறமொன்று பேசுபவன். அதனால் தான் அவனையும் அவனைச் சார்ந்து நின்றோரையும் முனாஃபிக்குகள் என அரபியில் கூறப்படுகிறது. முனாஃபிக் என்றால் தமிழில் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் நயவஞ்சகன் என்று ஆகும்.

இவனும் அவனை ஆதரிக்கின்ற கூட்டமும் பத்ர் போரில் ஈடுபடவில்லை.

பனூ கைனூகா எனும் யூதக் கூட்டத்தினர் இவனும் இவன் கூட்டமும் தங்களை ஆதரிப்பர் என நம்பியே நாயகம் (ஸல்) அவர்களைப் போருக்கழைத்தனர். பனூ கைனுகா கூட்டம் தோல்வியுற்ற பின்னர் அவர்களின் செயல்களை மன்னித்து மறந்துவிடவேண்டும் எனப் பெரு மானார் (ஸல்) அவர்களின் மார்புச் சட்டையைப் பிடித் திழுத்துக் கேட்கும் அளவுக்குள்ள முரடன் இந்த அப்துல் லாஹ் இப்னு உபை. இஸ்லாமியப் பற்றில்லாதவன். யூதர் களின் அந்தரங்க நண்பன். இவ்வாறான இவன் இஸ்லாமி யப் பகைவனெனத்தெரிந்திருந்தும் நாயகத்திருமேனி அவர் கள் அவனைக் கண்டித்திடவில்லை. கண்டித்து உரைபகர்ந் திடவுமில்லை. இதனால் தனக்கொரு தனிபலமும் செல் வாக்கும் இருப்பதாக அவன் எண்ணி வந்தான். அவ னுடைய கூட்டாளிகளும் அவ்வாறாகவே நினைந்து ஆதரித்தார்கள்.

நாயகம் (ஸல்) அவர்கள் உஹது போர்பற்றிய ஆரம்ப ஆலோசனைக் கூட்டத்தில் அப்துல்லாஹ் இப்னு உபை யைக் கலந்தாலோசனை கேட்டது உண்மை. அவன் உரையை நாயகம் (ஸல்) அவர்கள் ஏற்றிடவில்லை எனத் தெரிந்ததும் 'நபி இளைஞர்கட்குப் பணிந்துவிட்டார்' எனப் பகர்ந்தவனாக அவையை விட்டு ஏகிவிட்டான்.

உஹதுக்கு நாயகம் (ஸல்) அவர்கள் தங்கள் தோழர்களுடன் புறப்பட்டபோது மதினாவின் நிர்வாகத்தைத் தன்னிடம் ஒப்புவித்துச் செல்வார்கள், அந்தத் தகுதி தனக்கு உண்டென அப்துல்லாஹ் இப்னு உபை எதிர்பார்த்திருக்கலாம். ஆனால், நிர்வாகப் பொறுப்பை இப்னு உம்மிமக்தூம் (ரலி) அவர்களிடம் ஒப்படைத்துவிட்டார்கள் நாயகம் (ஸல்) அவர்கள்.

போர்க்கொடியைத் தாங்கிச் செல்கின்ற சிறப்புப் பெயரேனும் தனக்கோ தன்னைச் சார்ந்தவர்களுக்கோ கிட்டும் எனவும் அவன் நம்பியிருப்பான். மூன்று கொடிகள் தயாரிக்கப்பட்டன. அவற்றுள் ஒன்றை முஹாஜிரீன்களின் சார்பாக அலீ இப்னு அபீதாலிப் (ரலி) கையில் ஒப்படைக்கப்பட்டது. அதில் அவனுக்கு அதிருப்தி ஏற்பட நியாயமில்லை. காரணம், அது மக்கத்து முஸ்லிம்கள் சார்பில் அளிக்கப்பட்டதல்லவா!

இன்னொரு கொடியை அல்ஹுப்பாப் இப்னு முன்திர் (ரலி) வசம் அளிக்கப்பட்டது. இவர் மதீனத்து அன்ஸாரி. கஜ்ரஜ் கோத்திரத்தைச் சார்ந்தவர்.

மற்றொரு கொடியை உஸைத் இப்னு ஹுதைர் (ரலி) வசம் ஒப்புவிக்கப்பட்டது. இவரும் அன்ஸாரியே. அவ்ஸ் எனும் கோத்திரத்தார்.

இந்நிகழ்வுகள் தன்னை வேண்டுமென்றே நாயகம் (ஸல்) அவர்கள் ஒதுக்குகின்றார்கள் எனும் எண்ணம் அப்துல்லாஹ் இப்னு உபை மனத்தில் தோன்றியிருக்க வேண்டும். இது இயற்கை! தான் செய்ததை எண்ணிப் பாராதான் இப்படித்தானே எண்ணிட முடியும்? எனவே—

நாயகம் (ஸல்) அவர்களுடன் புறப்பட்ட அணியில் அவன் இணைந்துகொள்ளவில்லை. அவனைச் சார்ந்தவர்களுள் எவரொருவரையும் கலந்துகொள்ளச் செய்திடவுமில்லை. எனினும், முற்றாக ஒதுங்கியிருந்திடவும் முடிய

வில்லை. காரணம், ஊர் நிந்திக்குமல்லவா? துரோகியெனத் தூற்றிடவும் ஊரார் தயங்கிடமாட்டார்களே! ஆகவே நாயகம் (ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் புறப் பட்டுச் சென்ற பிறகு தன் அந்தரங்க நண்பர்களான யூதர் களுடன் கலந்து, அவர்களது ஆலோசனைப்படி யூதர்கள் துணையுடன் தன் ஆதரவாளர்களையும் அழைத்துக் கொண்டு நாயகம் (ஸல்) அவர்கள் தங்கியிருந்த மேட்டுக் கருகிலுள்ள மேட்டில் இரவோடு இரவாக வந்து தங்கி யுள்ளான் அப்துல்லாஹ் இப்னு உபை.

இவனையும் இவன் திட்டத்தையும் நாயகம் (ஸல்) அவர்கள் அறியாதிருப்பார்களா என்ன? எனவே, தம் தோழர்களுள் ஒருவரையனுப்பி விவரம் அறிந்திடலா னார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உபை தன் ஆதரவாளர்களான யூதக்கிளையார்களின் துணையுடன் போரில் கலந்து கொள்ள வந்திருக்கிறான் எனத் தெரியவந்தது. அப்துல் லாஹ் இப்னு உபை பற்றி நாயகம் (ஸல்) அவர்கள் ஏதொன்றும் கூறிவிடவில்லை. ''இஸ்லாமிய சன்மார்க் கத்தை ஏற்றிடாமல் எதிர்க்க வந்துள்ள பகைவர்களை எதிர்த்திட இஸ்லாமியரல்லாத யூதர்களை இணைத்துக் கொள்ள முடியாது'' என உரைத்தார்கள்.

அவ்வுரையினைக் கேட்ட யூதர்கள் மதீன மாநகர் நோக்கித் திரும்பிவிட்டார்கள். தன் நேசர்களைச் சேர்த் துக்கொள்ள மறுக்கின்ற முஹம்மதுடன் நானும் சேர்ந்து கொள்ளத் தயாராயில்லை என உரைத்துத் தன் ஆதர வாளர்களுடன் புறப்பட்டு மதீனம் சென்றடைந்தான் அப்துல்லாஹ் இப்னு உபை.

அவன் அவ்வாறாகத்தான் நடந்துகொள்வான் என்ப தைத் திட்டவட்டமாக நாயகம் (ஸல்) அவர்கள் அறிந் திருந்தார்கள். ஆம்! கட்டுச்சோற்றில் பூனையையும் வைத்துக் கட்டினாற்போல என ஒரு பழமொழி உண்டல்

லவா? அப்பழமொழிக்கேற்ப வெற்றியா இறப்பா, எது வரினும் ஏற்போம் என உறுதியுடன் திரண்டுள்ள வீரர் களுடன் குழப்பக்காரர்களையும் சேர்ப்பது அபாயகரமான தல்லவா? ஆகவே, வேண்டாம் என்று உரைத்திடாமல் அவர்களாகவே கழன்றோடிட வகை கண்டார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். இதன்பின்னர் எதற்கும் துணிந்த இறைநம்பிக்கையுடைய ஏழு நூறு பேர்களுடன் உஹது மலையினிடத்தே சென்று சேர்ந்தார்கள் பெருமானார் (ஸல்) அவர்கள்.

எதிரிலே ஜயாயிரம் பேர் அணி திரண்ட...ஆயுதம் தாங்கிய மக்கத்து மாவீரர்களின் படை... ஐநூறுக்கும் மேலான குதிரைப்படை, உருக்குச் சட்டையணிந்த மாவீரர்கள். 700 பேர் வாள் வீச்சினர், வில் வல்லாளர்கள், ஈட்டி எய்வோர், கவண் கல்வீச்சினர், பல போர்க்களங் களைக் கண்ட தளபதிகள், வீர வெறியூட்ட வல்ல பல்வி யங்கள், நரம்புகளில் வீரமுறுக்கேறுமாறு பாடவல்ல பெண் கூட்டத்தினர்...... இவர்கட்கெதிரே ஆயுத பலமின்றி அல்லாஹ்வையும் ரசூலையும் நம்பி நிற்கும் வெறும் 700 பேரைக் கண்டதும் அவர்களை எதிரிகளாகவா மதிப்பார் கள் எதிரணியினர்? 'இவர்களா நம்மை எதிர்க்கும் வீரர்கள்' என எண்ணி நகைத்துத்தானே இருப்பார்கள்...?

உஹது மலையை அடைந்த நாயகம் (ஸல்) அவர்கள் அமைதியுடன் ஆர்ப்பாட்டம் எதுவுமின்றிப் படைவியூகம் அமைக்கும் பணியில் ஈடுபட்டார்கள்.

## அபூசுப்யான் சூழ்ச்சி

அணிவகுப்புச் செய்திடும்போது, உஹது மலை தம் அணிக்கு முதுகுப்புறம் இருக்குமாறு செய்துகொண்டார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். மலைக்குப் பக்கத்தில் கணவாய் (இடைவெளி) ஒன்றிருந்தது. கவனம் சிறிது குறைந்தால்கூட எதிரிப்படை அவ்வழியாகப் புகுந்திடும்' அவ்வாறாக நடந்துவிட்டால் எதிரிகள் தம் படையை முன் புறத்திலும் பின்புறத்திலுமாகச் சூழ்ந்து தாக்கிட ஏதுவாகும். எனவே, முதலில் கணவாயைக் காத்திடவேண்டும். அதற்கான ஏற்பாட்டைச் செய்தார்கள் நாயகம் (ஸல்) அவர்கள், அதாவது, அம்பெய்துவதில் வல்லவர்களான 50 தோழர்களை அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் தலைமையில் நிறுத்தினார்கள். இந்த ஜுபைர், அவாம் என்பாரின் மகனல்ல. அவாம் மகன் ஜுபைருக்கும் அப்துல்லாஹ் என்றொரு மகன் உண்டு. பிற்காலத்தில் அவர் யஜீதை எதிர்த்து ஷஹீதான மாவீரர் இங்கு கூறப்படும் அப்துல் லாஹ், ஜுபைர் இப்னு நுஃமான் மகனாவார். பெரும் வீரர்.

'கணவாயில் காவல் நிற்போர் எக்காரணத்தைக் கொண்டும் நின்ற இடத்திலிருந்து அகன்றுவிடக்கூடாது. நமது படையணி தோற்றாலும் வென்றாலும் உங்கள் நிலை அதுதான். கணவாய் வழியாக எதிரிப்படை நுழைய முயன்றால் அவர்களை அம்பெய்தி விரட்டுவதொன்றே உங்கள் பணி. இதைத் தவிர்த்து எங்கள் நிலை எதுவானாலும் உங்கள் நிலையில் மாற்றம் கூடாது. மறவாதீர்! மாறாதீர்!!' என உறுதியுடன் உத்திரவிட்டார்கள் நாயகப் பேரொளி அவர்கள்.

'அவ்வாறாகவே நடந்துகொள்வோம் யாரஸூலல்லாஹ்!', என உரைத்தார்கள். பின்னர், தமக்கிட்ட கட்டளைப்படி 50 தோழர்களும் அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் தலைமையில் தமக்குரிய இடத்தில் சென்று நின்றார்கள்.

வந்த 700 தோழர்களுள் 15 பேர் போரிடற்கான வயதுடையவர்களல்லர் எனும் காரணத்தால் திருப்பி அனுப்பப்பட்டார்கள்.

கணவாயில் 50 பேர்; திருப்பி அனுப்பப்பட்டோர் 15 பேர். இவர்களைத் தவிர்த்து எதிரிகளை எதிர்த்துப் போரிட உறுதிபூண்டு நின்ற நபித்தோழர்கள் 635 பேர்களாவர்.

இந்த 635 பேர்கள் எதிரிகளான பயிற்சிபெற்ற 5000 வீரர்களையும் வீரத்தலைவர்களையும் எதிர்த்துப் போரிட அணிவகுத்து நின்றார்கள். எதிரியணியின் தளபதியான அபூசுப்யான் இஸ்லாமியப் படையணியின் முன்வந்து நின்றான். பத்ர் போர் அவன் நினைவுக்கு வந்திருக்க வேண்டும். எனவே, இந்த 635 பேர்களிலும் பேதம் உண்டாக்கி எண்ணிக்கையைக் குறைத்திட விரும்பினான் போலும். ஆகவே, அன்சாரிகளான மதீனத்து முஸ்லிம்களைப் பார்த்துப் பேசினான்.

'எனது அன்பிற்கும் மரியாதைக்குமுரிய மதீன மாநகரத்தின் மாவீரர்களே! உங்களுக்கும் எங்களுக்கும் பகைமையில்லை. எங்கள் பகையெல்லாம் என் சிறிய தந்தை மகனாகிய முஹம்மதுடனும் மக்க மாநகரத்து முஸ்லிம்களுடனும் மட்டுந்தான். எங்களுக்குள் நடைபெறவுள்ள போரில் நீங்கள் ஈடுபடவேண்டாம், சென்றுவிடுங்கள்' எனப் பேசினான்.

ஒன்றுபட்ட கூட்டத்தை இரண்டுபடுத்தி வெற்றி தேடிட நினைக்கின்ற அபூசுப்யானின் நோக்கத்தை அன்சாரி முஸ்லிம்கள் நன்கு புரிந்துகொண்டார்கள். எனவே, 'அன்சாரி முஸ்லிம்களிடையே பிளவு உண்டாக்கப் பார்த்

கும் துரோகியே! கொடிய ஷைத்தானே! எங்களை நாயகம் (ஸல்) அவர்களிடமிருந்து பிரித்துவிட உன்னால் மட்டுமல்ல' இந்த உலகத்திலுள்ள எவராலும் முடியாது. விரைந்து விலகிப்போ!' என விண்ணதிர முழக்கமிட்டார்கள்.

தனது ராஜதந்திரம் பலிக்கவில்லை என அறிந்ததும் அபூசுப்யானின் தலை நாணத்தால் கவிழ்ந்திருக்க வேண்டும். அவன் காரியவாதி. காரியவாதிகள் மானாபி மானத்தைப்பற்றிக் கவலைப்படுவார்களா என்ன? வீணாக உயிர் துறந்திட வந்துள்ளோரே, பார்ப்போம் உங்கள் வீரத்தை என எண்ணியிருப்பான். ஆனால், சொல்லிவிட வில்லை. தன் படையணியை நோக்கி நடந்தான் அபூசுப்யான்.

அகன்ற எதிரிப்படையின் தளபதியான் அபூசுப்யான் படை வியூகம் அமைத்தான். அணிவகுத்து நின்ற படை வீரர்களின் ஒரு முனையில் குதிரைப் படைத்தலைவனும் துணைத் தளபதியுமான காலித் பின் வலீத் போரிடத் தயாரானான்.

இன்னொரு முனையில் ஈடிணையற்ற வாள் வீச்சின னான இக்ரிமா இப்னு அபுஜஹல் தலைமையேற்று நின் றான். இவனும் துணைத்தளபதிதான். படையின் முன்னணித் தலைவன் ஸஃப் வானுப்னு உமையா. தல்ஹத் இப்னு அபீதல்ஹா கொடியேந்தி முன்வந்தான்.

இவ்வாறாகத் தளபதி அபூசுப்யானிப்னு ஹர்ப் செழு மையுடன் தனக்கே வெற்றி எனும் மமதையில் படை வியூகம் வகுத்தமைத்து மகிழ்ந்தான். நாயகப்பேரோனி (ஸல்) அவர்களின் அணியில் 635 பேர். அபூசுப்யான் அணியிலோ ஐயாயிரத்தவர்.

நாயகம் (ஸல்) அவர்களின் அணிக்கு உள்ள பலமான ஆயுதம் இறைநம்பிக்கையும் சன்மார்க்கப் பற்றும் ரஸூலே கரீம் முஹம்மது முஸ்தபா ரஸூல் (ஸல்) அவர்களும்தாம்.

அபூசுப்யான் அணியினருக்கோ லாத், உஸ்ஸா போன்ற ஆளுக்கொரு தெய்வமும் ஆயுதபலமும் ஜெயிப் போம் என்ற மமதையும், தான் என்ற ஆணவமுமே பல மாயிருந்தன.

நாயகம் (ஸல்) அவர்கள் அதிர்ச்சியுறவில்லை, ஆத்தி ரப்படவுமில்லை. 'அல்லாஹ் இருக்கிறான், அவன் ஒருவன் துணையே போதுமானது' எனும் அசைக்க முடியா நம்பிக்கையில் போருக்கஞ்சாத பெரும் வீரனாம்

காலித் பின் வலீத்துக்கு எதிராக ஜுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களை நிறுத்தினார்கள். இதுபோன்றே மற்ற வர்கட்கும் அவரவர்க்கேற்றவர்களை நிறுத்தினார்கள். சன்மார்க்கக் கொடியை *முஸ் அபுப்னு உமைர் (ரலி) ஏந்தினார்கள்.

இரு அணியினரும் எதிரெதிராக நின்றனர். போர் ஆரம்பமாக வேண்டும். முஸ்லிம்கள் போர்த் தொடக்கம் செய்பவர்களல்லர். எதிரிதான் தொடங்க வேண்டும். தங்கள் மீது திணிக்கப்படுகின்ற போரினைச் சந்திப்பவர் களே முஸ்லிம்கள்.

அக்கால அரபியர்களின் பழக்கம், முதலில் துவந்த யுத்தம் நடத்துவது. அதாவது, இரு அணியிலுமிருந்து ஒவ் வொருவர் முன்வர வேண்டும். இருவரும் போரிடுவர். இந்நிகழ்வுக்குப் பின்னரே பொதுப்போர் நடைபெறும். பத்ர் போரும் இப்படித்தான் நடந்தது.

இவ்வடிப்படையில் எதிரியணியின் கொடி ஏந்தி நின்ற தல்ஹத் இப்னு அபீதல்ஹா முன்வந்தான். தன்னோடு போரிடுமாறு அழைப்புவிட்டான். சிறிது நேரம் அமைதி. அவன் குரல் பலமுறை பலமாக ஒலித்ததன் பின்னர், அலீ இப்னு அபீதாலிப் (ரலி) அவர்கள் சென்று போரிட்டு அவனது கால்களைத் துண்டித்துவிட்டுத் திரும்பினார்கள்.

தல்ஹத் இப்னு அபீதல் ஹாவைத் தொடர்ந்து பலர் (11 பேர் என்பர்) ஒருவர் பின் ஒருவர் கொடியேந்தி வந்து போரிட்டு உயிரை இழந்து வன்னரகிற்கேகினர்.

---

* *மக்கத்துக் கணவாயில் நாயகம் (ஸல்) அவர் களிடம் 'பை அத்' செய்து இஸ்லாத்திலாகிய மதீன நகரத்து வாசிகளுக்கு சன்மார்க்க நடை முறைகளையும் மார்க்க நெறிகளையும் கற்பித்திட நாயகம் (ஸல்) அவர்களால் மதீனத்துக்கு அனுப்பி வைக்கப்பட்டவர்களாவார்கள் இந்த முஸ்அ புப்னு உமைர் (ரலி) அவர்கள்.*

இந்நிகழ்வு மக்கத்து மாபெரும் கூட்டத்தினரிடையே அச்சத்தைத் தோற்றுவித்தது. அதனால் ஏந்துவார் யாருமின்றி அவர்களின் கொடி தரையில் சாய்ந்து கிடந்தது. குருதி தோய்ந்த அந்தக் கொடி, நெடுநேரம் தொடுவாரின்றிச் சுருண்டு கிடந்தது. ஆண்களுக்கு ஏற்படாத் துணிவு ஒரு பெண்ணுக்கு ஏற்பட்டது. ஓடோடி வந்து கொடியைப் பற்றித் தூக்கி நிறுத்தினாள். குருதித் தோய்வில் ஈரமேற்றுத் தொங்கிய கொடி ஆடி அசைய மறுத்தது. எனினும் அவள் அக்கொடியைக் கையில் பற்றி மிகத் துணிவோடு நிமிர்த்தி நிறுத்தினாள். மக்கத்து வீரர்களுக்குப் பட்டு அழிந்துபோன வீரம் இதன் பின்னரே துளிர்த்திட ஆரம்பித்தது. போர் முனையை நோக்கி விரைந்தோடி வந்தார்கள். இரு அணியினரிடையேயும் கொடூரமான யுத்தம் தோன்றிப் போர்க்களத்தில் குருதிப் பிரவாகம் ஓடிடவைத்தது.

சில மணி நேரமே நடந்த போதும் விளைவுகள் கடினம். தாக்குப்பிடித்திட இயலா நிலையிலே மக்கத்துக் குரைஷியரின் படை திரண்டோடிற்று. ஆம், தலைமைத் தளபதி அபுசுப்யானும், அடுத்த இரு தளபதிகளான காலித்துப்னு வலீதும், இக்கிரிமத்துப்னு அபுஜஹ்லுமே ஓடியபோது இதர வீரர்கள் என் செய்வார்கள்? ஓடியது கூலிப்படைகள் மட்டுமல்ல, வீர தீர பராக்கிரமசாலிகளான குரைஷிக் கூட்டமே ஓடிற்று. ஓடிச் சிறிது தொலைவில் நின்று திரும்பிப் பார்த்தபோது...

ஓடிவிட்டார்கள் பகைவர்கள் வெற்றி நமக்கே எனும் நினைப்பில், போர்க்களத்தே நின்றிருந்த சன்மார்க்கப் பட்டாளம், பகைவர்கள் விட்டுச் சென்ற பொருள்களை, ஆயுதங்களை, வெட்டுண்டு வீழ்ந்துபட்டவர்களின் ஆடை, அணி போன்ற உடைமைகளைத் தமதாக்கிக் கொள்வதில் முனைந்திருப்பது தெரியவந்தது. அப்படி எடுத்துக்கொள்ளக்கூடாதென்கின்ற அறிவிப்பு வந்திடாக் காலம் அது.

இப்பணியில் போர்க்களத்தே நின்றவர்கள் மட்டுமன்றி, மலைக்கண வாயிலில் காவல் பணியில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த வீரர்களும் ஈடுபட்டிருப்பது தெரிய வந்தது.

இந்தக் காட்சியை முதலில் கண்டவன் காலித் துப்னு வலீத் என்கின்ற தளபதி.

சென்று தாக்கிட வாய்ப்புக் கிட்டியிருப்பதை அவன் உணர்ந்தான். இக்கிரமத்திப்னு அபுஜஹ்லின்பால் உரைத்தான். அதை அவன் அபூசுப்யான் இடத்தில் செப்பினான். ஓடுகின்ற வீரர்களைத் திரும்பிடுமாறு கட்டளையிட்டான் அபுசுப்யான்.

கட்டளை வெளியாகிடும் முன்னரே தமது குதிரைப் படையைத் திருப்பிக்கொண்டு மலைக்கணவாய் வழியாக(ப் பின்புறமாக) வந்து தாக்கினான் காலிதுப்னுவலீத். அவனைப் பின்பற்றினான் இக்கிரிமத்துப்னு அபுஜஹ்ல்!

கணவாய்க் காவலில் நின்ற ஐம்பது பேர்களுள் நாற்பது பேர் தங்கள் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு, ஆசை மேலீட்டால், தலைமை ஏற்றிருந்த அப்துல்லாபின் ஜுபைர் தடுத்தும் கேளாமல் பொருளாசையில் போர்க்களத்தினுள்ளேகி, எதிரிகள் விட்டுச் சென்ற ஆயுதங்களையும் இறந்துபட்டவர்களின் ஆடை, அணிகளையும் தமதாக்கிக்கொள்வதில் முனைந்துவிட்டதால், எஞ்சி நின்ற பத்து வீரர்களை வெட்டி வீழ்த்திவிட்டு, போர்க்களத்துள் மேவி, அங்கு நின்ற இஸ்லாமியச் சன்மார்க்க வீரர்களுடன் பொருதுவது எளிதாயிற்று மக்கமாநகரினருக்கு! ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டிருந்த வீரர்கட்கும் ஆயுதம் தாங்கியவர்கட்கும் போர்! கடும்போர்! யாரை யார் தாக்குகின்றோம் என அறியாத நிலையிலே ஆக்ரோஷமான தாக்குதல்...! குழப்பம். கூச்சல். வாள்வீச்சை வெறுங்கையாலேயே தடுத்திடும் நிலை இஸ்லாமியப் படையணியினர்க்கு! ஆம், கீழே வைத்த ஆயுதங்களை எடுக்குமுன்னும் தாக்குதல்! இந்த நிலையில்...!

அபுசுப்யானின் மனைவி இந்தா மகிழுமாறு நீக்ரோ (அடிமை) ஒருவன் எறியீட்டி வீசித் தாக்கினான். ஹம்ஸா (ரலி) அவர்களை! நாயகம் (ஸல்) அவர்களின் சிறிய தந்தையும் நிகரற்ற வீரருமான ஹம்ஸா (ரலி அவர்களை நிகர்த்த வீரர் எதிரணியில் யாருமில்லை. ''எந்த நிலையிலும் நீங்கள் நின்றிருக்கும் இடம்விட்டுப் பெயரலாகாது'' என்று நாயகம் (ஸல்) அவர்கள் இட்ட கட்டளையைக் கணவாய்க் காவல் வீரர்கள் கடைப்பிடித் திடாததின் விளைவு...?

ஹம்ஸா (ரலி) அவர்களும் ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டு, எதிரிகள் விட்டுச் சென்ற உடைமைகளை எடுப்பதில் ஈடுபட்டவர்களுள் ஒருவராகினார்களா எனக் கேட்பது தவறு. கூட்டு முயற்சியில் ஒருவர் தவறு செய் தாலும் அது மற்றவர்களையும் பாதிக்கும் என்பதற்கு இது ஒரு சான்று.

ஹம்ஸா (ரலி) வீழ்த்தப்பட்டார்கள் என்பதில் இந்தா வுக்கு ஒரே மகிழ்ச்சி! தன் துயரம் தீர்ந்துவிட்டதில் ஆனந்தம், தன்னுடைய சகோதரரையும், சிறிய தந்தை யையும் (பத்ர் போரில்) வீழ்த்தியவரை வீழ்த்தித் தமது சபதத்தை நிறைவேற்றிவிட்டதில் குதூகலம்...!

ஹம்ஸா(ரலி) அவர்களின் வயிற்றைக் கிழித்து குடலை எடுத்து, மாலையாகத் தரித்துக்கொண்டாள். காதுகளையும் மூக்கையையும் அறுத்தெடுத்தாள்! ஈரலைப் பிய்த்தெடுத்துக் கடித்துத் துப்பினாள்...!

மொத்தமாக, உருத் தெரியாதபடிக்கு சிதைத்துவிட் டாள் ஹம்ஸா (ரலி) அவர்களின் உடலை இந்தா! இது அவளுக்கு வெற்றிதான்! அற்பனுக்கு வாழ்வு வந்தது போன்றதாயிற்று அவள் நிலை!

'போர்க்களம் பட்ட பாடு' என்பார்களே, அது அங்கு நிதர்சனமாகிக்கொண்டிருந்தது.

முஸ்அபுப்னு உமைர் (ரலி). இவர் ஹிஜ்ரத்திற்கு முன்பாகவே இஸ்லாமியப் போதிப்பிற்காக மதீன மாநகரினுக்கு வந்தவர். தோற்றத்தில் நாயகம் (ஸல்) அவர்களை நிகர்த்தவர். இவரை எதிரணி வீரர்களுள் ஒருவனான இப்னுகும் அத்தில்லைதீ என்பான் வெட்டி வீழ்த்திவிட்டான். வீழ்த்தியது மட்டுமன்றி, தோற்ற ஒற்றுமை ஒன்றை மட்டுமே கொண்டு, ''முகம்மதைக் கொன்றுவிட்டேன், முகம்மதைக் கொன்றுவிட்டேன்'' எனக் கூவினான். அவனுடைய அந்தக் கூச்சல் அப்பாசறை முற்றிலும் நொடிப்பொழுதில் பரவிற்று. மதுவருந்திய மந்தி போலானார்கள் எதிரிகள்! நபித் தோழர்களாகிய இஸ்லாமியப் போர் வீரர்கள் அதிர்ச்சியுற்றார்கள். 'இனிப் போரிட்டென்ன பயன்' என எண்ணியோர் ஒப்ப, அயர்ந்தமர்ந்துவிட்டனர். சிலர் மதீன மாநகரினுக்கே திரும்பி ஏகிடலாயினர். அதுபோது—

''நாயகம் (ஸல்) அவர்கள் இறந்து பட்டபின்பு நாம் ஏன் உயிர் வாழ வேண்டும்? எழுங்கள் வீரத்துடன் போராடி (ஷஹீதாகி) இறந்துபட்டு வீர சுவர்க்கம் புகுவோம்'' என ஒரு குரல் ஒலித்தது. அப்படிக் குரல் எழுப்பியவர் அனஸ் (ரலி) என்பது வரலாறு! ''ஆம், அதுவே சரி'' என வீறு கொண்டெழுந்தனர் நபித் தோழர்கள் அனைவரும்.

போர்க்களம் மீண்டும் சூடு பிடித்தது. நாயகம் (ஸல்) அவர்கள் தாம் நின்றிருந்த இடத்தைவிட்டடி பெயர்ந்திடவில்லை. அவர்களை நோக்கி அம்புகள் வந்த வண்ணமிருந்தன. சஹதுப்னு அபிவர்காஸ் (ரலி) நாயகம் (ஸல்) அவர்கள் முன்பு நின்றபடி வருகின்ற அம்புகளைத் தடுத்து, சரமாரி பொழிந்து நின்றார்கள். இந்த நிலையில்-

எதிரணியினரால் எறியப்பட்ட கல் ஒன்று நாயகம் (ஸல்) அவர்களின் உதட்டிலும் முகத்திலும் வந்து தாக்கியது. பற்கள் இரண்டு விழுந்துபட்டன. முகத்திலும் அழுத்தமான காயம் ஏற்பட்டு இரத்தம் வடியலாயிற்று.

கீழே விழுந்துபட்ட அவர்களை நபித்தோழர்கள் தூக்கி அமர்த்தினார்கள்.

போரின் முடிவை எதிர்பார்த்திருந்த மதீன நகரவாசிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறந்துபட்டார்கள் (ஹஹீதாகிவிட்டார்கள்) எனும் செய்தி கேட்டு உஹது மலையை நோக்கி ஓடிவந்தார்கள். அவர்களுள் பெண்களும் உண்டு. அப்பெண்கள் தம்மவர்கள் இறந்துபட்டது பற்றிக் கவலைப்படவில்லை. நாயகம் (ஸல்) அவர்களைப்பற்றிய கவலையுடையவர்களாகவே ஓடி வந்தார்கள் என்பது வரலாறு.

மீண்டும் போர் சூடு பிடித்திருப்பதையும், நாயகம் (ஸல்) அவர்கள் இறந்துபடவில்லை என்பதையும் அறிந்த அபூசுப்யான் உள்ளிட்ட மக்க மாநகர்ப்படையினர் 'பெற்றதே பெரும் வெற்றி' எனும் முடிவில் திரும்பிச் சென்றிடலாயினர்.

அவர்கள் அகன்றேகிய பின்னர் தமது தோழர்களை அனுப்பி இறந்துபட்டவர்களைக் கண்டறிந்து வந்திடுமாறு செய்தார்கள் நாயகம் (ஸல்) அவர்கள். தம்மவர்களுள் நான்கு முகாஹிரீன்களும் (அகதி முஸ்லிம்கள்) அன்சாரி முஸ்லிம்களுள் (மதீனத்து முஸ்லிம்கள்)அறுபத்தொருவரும் எனக் கண்டறியப்பட்டது. இவர்களுள் ஹம்ஸா (ரலி) அவர்களும் ஒருவர். அவர்களின் உடலைப் பார்த்ததும் எதற்கும் கலங்கிடாத நாயகம் (ஸல்) அவர்கள் கண்ணீர் மல்கினார்கள். காரணம், ஹம்ஸா (ரலி) அவர்களின் உடலம் சிதைக்கப்பட்டிருந்ததே. இஃதொப்ப அடையாளம் தெரிந்திடவியலாத நிலையில் வேறு சிலரின் உடலங்கள் காயமேற்றுச் சின்னாபின்னமாகி இருந்திடவும் கண்டார்கள். இறந்துபட்டவர்கட்கான (ஜனாஸாத்) தொழுகை நடத்தி அனைவருடலங்களையும் எடுத்து நல்லடக்கம் செய்ததற்பின் அவ்விடம் விட்டுத் தமது தோழர்களுடன் நாயகம் (ஸல்) அவர்கள் மதீன மாநகர் நோக்கிப் புறப்படலானார்கள்.

இப்படையெடுப்பு இரு தரப்பினர்கட்கும் வெற்றி தோல்வியின்றி முடிந்ததென்றாலும் சேதம் இஸ்லாமியர்கட்கே அதிகம். ஆம், மொத்தம் அறுபத்தைந்து பேர்கள் (சஹீதாகி) மறணமுற்றிருந்தார்கள் அல்லவா? எதிரிகளுள் பதினான்கு பேர்களே மாண்டுபட்டவர்கள்.

பத்ர் போரில் கொல்லப்பட்ட எதிரிகள் 70 பேர்கள். இந்தப் போரில் அறுபத்தைந்து பேர்களை அவர்கள் இறப்புலகிற்குடையவர்களாக்கியது, ஒரு வகையில் அவர்கட்கு வெற்றிதானே? சமாதானம் அடையக்கூடியது தானே?

இந்தப் போரில் அறுபத்தைந்துபேரை இழந்தது, கட்டுக்கோப்பு இல்லாததினாலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் கட்டளையை மீறியதாலுமே எனும் படிப்பினையைக் கற்றது இஸ்லாமியப் படையணி. இனி இவ்வாறு நடந்திடக்கூடாது எனும் படிப்பினையை ஏற்ற அளவில் இஸ்லாமியப் படையினருக்கும் இது ஒரு வகையில் வெற்றியாகவே அமைந்ததெனலாம். அதுமட்டுமன்றி, பத்ர் போரின் வெற்றி, இனி நமக்கேதான் வெற்றி எனும் எண்ணத்தை இஸ்லாமியர்கட்கு ஏற்படுத்தியிருக்குமானால், வெற்றி தோல்வி என்பது ஒருவழிப் பாதை போன்றதல்ல என்பதை அறிந்தவர்களாகவும் ஆக்கிற்று இப்போர் இஸ்லாமியர்களை எனவும் கொள்ளத்தகும். இவ்வகை அனுபவ அறிவிலும் சிறந்தவர்களாக இஸ்லாமியர்களை ஆக்கிடவே இந்தப் போர் நிகழ்வை இறைவன் அமைத்தான் எனவும் கொண்டிடவும் இயலுமல்லவா!

எதிரிகட்கோ, முகம்மது வெற்றியாளர் மட்டுமல்ல, நாம் முயன்றால் அவரை வென்றிடவும் இயலும் என்கின்ற நம்பிக்கையை இந்தப் போர் அளித்துளதெனவும் கொள்ளலாம். ஆம், அவர்கள் மேற்கொண்ட அடுத்த நிகழ்வு, இம்முடிவிற்கு வரும் வகையில்தான் அமைந்துள்ளது. மற்றும் சுற்றுப்புறக் கிராமமக்களிடங்கூட, வெல்லற்கரிய வீரர்கள் அல்ல இஸ்லாமியர்கள் எனும்

நினைப்பினை இந்தப் போர் உண்டாக்கிற்றென்பதாகவே பிந்திய செயற்பாடுகள் அமைந்து திகழ்ந்ததாகவே வரலாறு காட்டுகிறது.

இவற்றையெல்லாம் இறை துணை கொண்டு சமாளித்து, இஸ்லாமிய நன்நெறியை நிலைநாட்டிட வேண்டியவர்களாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை இப்போர் ஆக்கிற்று. இதன் விளைவாகப் பெருமானார் அவர்கள் சிறு சிறு பயணங்களை மேற்கொள்ளவும், ஆங்காங்கு தோன்றிய கலங்களை அடக்கிட வேண்டிவவர்களுமானார்கள்.

பத்ர்—உஹதுப் போர், இரண்டும் ஒவ்வோர் நாளிலேயே முடிந்த போர்கள்தாம். எனவே, இதனினும் பெரிய போரினை நடத்திடப் பெரும்படை திரட்டிட வேண்டியவர்களானார்கள் மக்கமாநகரினர். சன்மார்க்க நெறியாகிய இஸ்லாமிய நெறியைப் பரப்பிட, நிலை நாட்டிட ஆண்டவன் நாட்டப்படிக்கு நாயகம் (ஸல்) அவர்களைச் சுறுசுறுப்படையச் செய்துகொண்டிருந்தார்கள் மக்க மாநகரினர்.

உஹதுவரை
முற்றும்.

உஹுதுப் போரில் பங்கெடுத்து உயிர்த்தியாகம் செய்தவர் (ஷுஹதாக்)களின் பெயர்கள் வருமாறு:

1. ஹம்ஸா இப்னு அப்துல் முத்தலிப்(ரலி) அவர்கள்
2. அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் (ரலி)
3. முஸ்அப் இப்னு உமைர் ,,
4. ஷம்மாஸ் இப்னு உதுமான் ,,

இவர்கள் நால்வரும் முஹாஜிர்கள்.

மதீனத்து அன்ஸாரிகளின் பெயர்கள் வருமாறு

5. அம்ரு இப்னு முஆத் (ரலி)
6. ஹாரித் இப்னு அனஸ் ,,
7. உமாரா இப்னு ஜியாத் ,,
8. ஸலமா இப்னு தாபித் இப்னு வக்ஷ் ,,
9. அம்ரு இப்னு தாபித் இப்னு வக்ஷ் ,,
10. தாபித் இப்னு வக்ஷ் ,,
11. ரிபாஆ இப்னு வக்ஷ் ,,
12. ஹுஸைல் இப்னு ஜாபிர் ,,
13. ஸைஃபீ இப்னு கைளீ ,,
14. ஹபீப் இப்னு கைளீ ,,
15. அப்பாத் இப்னு ஸஹ்ல் ,,
16. ஹாரித் இப்னு அவ்ஸ் ,,
17. இயாஸ் இப்னு அவ்ஸ் ,,
18. உபைத் இப்னுத் தையிஹான் ,,
19. ஹபீப் இப்னு யஜீத் ,,

20. யஜீத் இப்னு ஹாத்திப் (ரலி)
21. அபூசுப்யான் இப்னு ஹாரித் ,,
22. ஹன்ளலா இப்னு அபீ அமீர் ,,
23. உனைஸ் இப்னு கத்தாதா ,,
24. அபூ ஹய்யா இப்னு அம்ரு ,,
25. அப்துல்லா இப்னு ஜுபைர் ,,
(Jubayr என்பது Zubayr அல்ல)
26. கைதமா அபூ ஸஅத் இப்னு கைதமா ,,
27. அப்துல்லாஹ் இப்னு ஸலமா ,,
28. ஸுபைஃ இப்னு ஹாத்திப் ,,
29. அம்ரு இப்னு கைஸ் ,,
30. கைஸ் இப்னு அம்ரு ,,
31. ஃதாபித் இப்னு அம்ரு ,,
32. ஆமிர் இப்னு மக்லத் ,,
33. அபூ ஹுபைரா இப்னுல்ஹாரித் ,,
34. அம்ரு இப்னு முத்தாரிப் ,,
35. அவ்ஸ் இப்னு ஃதாபித் ,,
36. அனஸ் இப்னு நள்று ,,
37. கைஸ் இப்னு முகல்லத் ,,
38. கைஸான் ,,
39. ஸுலைம் இப்னு ஹாரித் ,,
40. நுஃமான் இப்னு அப்து அம்ரு ,,
41. காரிஜா இப்னு ஜைத் ,,
42. ஸஃது இப்னுர் ரபீஉ ,,
43. அவ்ஸ் இப்னுல் அர்க்கம் ,,

44. மாலிக் இப்னு சினான் ,,
45. ஸயீத் இப்னு சுவைத் (ரலி)
46. உத்பா இப்னு ரபீஉ ,,
47. தஅலபா இப்னு ஸஅத் ,,
48. ஃதக்ஃபு இப்னு ஃபர்வா ,,
49. அப்துல்லா இப்னு அம்ரு ,,
50. ளம்ரா ,,
51. நவ்ஃபல் இப்னு அப்துல்லா ,,
52. அப்பாஸ் இப்னு உபாதா ,,
53. நுஃமான் இப்னு மாலிக் ,,
54. முஜத்தர் இப்னு தியாத் ,,
55. உபாதா இப்னு ஹஷ்காஸ் ,,
56. ரிஃபாஆ இப்னு அம்ரு ,,
57. அப்துல்லாஹ் இப்னு அம்ரு ,,
58. அம்ரு இப்னு ஜமூஹ் ,,
59. ஃகல்லாத் இப்னு அம்ரு ,,
60. அபூஅய்மன் ,,
61. ஸுலைம் இப்னு அம்ரு ,,
62. அன்த்தரா ,,
63. ஸஹ்லு இப்னு கைஸ் ,,
64. தக்வான் இப்னு அப்துகைஸ் ,,
65. உபைத இப்னு முஅல்லா ,,

முற்றும்

## ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள்

1. தப்ஸீருல் ஹமீத் பீ தப்ஸீரி குர்ஆனில் மஜீத் (ஆசிரியர்: உத்தமபாளையம் மௌலவீ எஸ்.எஸ். அப்துல் காதிர் சாகிபு பாக்கவீ).
2. தர்ஜுமத்துல் குர்ஆன் பி அல்தஃபில் பயான் (அல்லாமா ஆ.கா. அப்துல் ஹமீது பாக்கவீ).
3. ஹலறத் முஹம்மத் றசூலுல்லாஹ் (ஸல்) (உத்தம பாளையம் மௌலவி எஸ். எஸ். அப்துல் காதிர் சாஹிபு பாக்கவீ).
4. திருநபி சரித்திரம் (அல்ஹாஜ் மி. ந. முஹம்மது ஸாஹிப்).
5. நபிகள் நாயக மான்மியம் (அல்ஹாஹ் பா. தாவூத் ஷா சாஹிபு).
6. நபிபெருமானார் வரலாறு (என். பி. அப்துல் ஜப்பார் சாஹிபு).
7. நபிகள் நாயகம் வாழ்க்கை வரலாறு (அ. லெ. நடராஜன்).
8. நபிகள் நாயகம் வரலாறு (மறுவிலா முழுவதி)— ஜமால்.
9. நபிகள் நாயகம் (எம். ஆர். எம். அப்துற்றஹீம்).
10. சீறாவென்கின்ற புராணம் (புலவர் நாயகம் செய்கப்துல் காதிர் நெயினார் லெப்பை ஆலிம். முதற்பதிப்பு 1842).
11. சீறாப்புராணம் (கண்ணகுமது மகுதூம் முகம்மது புலவர் பதிப்பு)
12. சீறாப்புராணம் மூலமும் பொழிப்புரையும்-சதாவதானி கா. ப. செய்குத்தம்பிப் பாவலர், பாகம் 1 (1903) பாகம் 2 (1908).
13. சீறாப்புராணம் (எம். இத்ரீஸ் மரைக்காயர் பதிப்பு 1987).
14. Muhammad The Prophet (M. R. M. Abdur Rahim).
15. The Life of Muhammad (Translation of Ibn Ishaq's Sirat Rasulullah: Oxford University Press).

## கவி காமு ஷெரீப் எழுதிய இதர நூல்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| சீறாப்புராணம் மூலமும் உரையும் | | |
| நுபுவ்வத்துக் காண்டம் முதற்பாகம் | 40 | 00 |
| ஷை இரண்டாம் பாகம் | 30 | 00 |
| ஷை மூன்றாம் பாகம் | 40 | 00 |
| ஷை நான்காம் பாகம் | 35 | 00 |
| ஷை கிசுறத்துக் காண்டம் முதற்பாகம் | 45 | 00 |
| ஷை இரண்டாம் பாகம் | 35 | 00 |
| ஷை மூன்றாம் பாகம் | 40 | 00 |
| ஷை நான்காம் பாகம் | 45 | 00 |
| ஷை ஐந்தாம் பாகம் | 32 | 00 |
| வானொலியில் சீறாப்புராணச் சொற்பொழிவு | 20 | 00 |
| கிழக்கில் உள்ள பிறைக்கொடி நாடு | 20 | 00 |
| நபியே எங்கள் நாயகமே | 15 | 00 |
| நீங்களும் பாடலாம் | 6 | 00 |
| ஆன்ம கீதம் | 5 | 00 |
| இறையருள் வேட்டல் | 3 | 00 |
| இஸ்லாம் இந்து மதத்திற்கு விரோதமானதா? | 7 | 00 |
| இஸ்லாமும் ஜீவகாருண்யமும் | 7 | 00 |
| பொதுச்சிவில் சட்டம் பொருந்துமா? | 7 | 50 |
| இறைவனுக்காக வாழ்வது எப்படி? | 5 | 00 |
| வள்ளல் சீதக்காதி வரலாறு | 17 | 00 |
| ஆயிஷா நாச்சியார் பிள்ளைத்தமிழ் | 15 | 00 |
| கவி காமு ஷெரீப் கவிதைகள் | 45 | 00 |
| களப்பாட்டு | 6 | 00 |

*வி. பி. கிடையாது. முன் பணம் அனுப்புவோருக்குத் தபால் செலவின்றி நூல்கள் அனுப்பப்படும். வியாபாரிகட்குக் கழிவுண்டு.*

*விவரங்கட்கு:*

**சீதக்காதி நூல் வெளியீட்டகம்**

21, பச்சையப்பச் செட்டித் தெரு,
சென்னை - 600 002.